வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி.ஏ.,

அவர்கள் இயற்றிய

நூற்றொகுதி



முதற் பகுதி

# 6. ஸ்ரீ மணியசிவனார் சரித்திரம்

इदं ग्रंथं

हालास्य पुरस्थ श्रोत्रिय
कुलालंकार भूतस्य
श्री. श्रीनिवास यज्वतनुजस्य
विदितसकल निगमार्थस्य
श्री. सुब्रह्मण्य शिवस्य
स्मृत्यर्थमंकितं

तद्भक्तेन ग्रंथकर्ता

---

இவை
தண்டலம்
பிரம்மஸ்ரீ. ச. நாராயண சாஸ்திரியார், பி. ஏ.,
சொல்லிய

शार्दूल विक्रीढितं

श्रीहालास्य पुरेशुभे विजयते
विद्वद्भिरामोदितः
श्री गोविन्दशिवात्मजोद्विजवरः
श्री सूर्यनारायणः।
आंग्लद्राविढभाषयोः प्रचतुरा
बि. ए. पदालंकृतः
श्रीमच्चेन्नपुरी किरिस्तवकला
शालामनीष्यगृणोः॥

स्रग्धरा

तेनेदं संप्रणीतं मृदुललितपदं
गद्यरूपं नवीनं
विद्यावृत्तिं विरच्य प्रकटित निजसु–
प्राभवस्य द्विजस्य ।

இவை

பருத்தியூர்

பிரம்மஸ்ரீ. கிருஷ்ணசாஸ்திரியாரவர்கள் குமாரர்

கல்யாணராம் சாஸ்திரியார்

சொல்லிய

आर्या

मधुरापुरी निवासी
महनीयगुणोमनोजइवतनुमान्.
मान्यस्सतांमनीषी
मधुवाक् जयतीह सूर्यमधुहंता ॥ १ ॥

अनुष्टुप्

मिलमंडल मध्यस्थः
सूर्यनारायण स्सदा
त्रिसंध्य ममल प्रज्ञैः
सद्भिःस्संसेव्यते मुदा ॥ २ ॥

आर्या

गोविन्द सूरितनयः
मणिशिव शिष्यस्सएषकवितिलकः।
स्वगुरोर्बंधचरितं
मधुरपदैर्मृदुळभावयुतैः ॥ ३ ॥

आर्या

कल्याणराम नामा
परित्तियूर् कृष्णशास्त्रिणां सूनुः।
मणि शिवचरितं ललितं
दृष्ट्वा हृष्टो मुदाच सम्मनुते ॥ ४ ॥

𑌆𑌰𑍍𑌯𑌾

𑌮𑌧𑍁𑌰𑌾𑌪𑍁𑌰𑍀 𑌨𑌿𑌵𑌾𑌸𑍀
𑌮𑌹𑌨𑍀𑌯𑌗𑍁𑌣𑍋 𑌮𑌨𑍋𑌜𑌇𑌵 𑌤𑌨𑍁𑌮𑌾𑌨𑍍।
𑌮𑌾𑌨𑍍𑌯𑌸𑍍𑌸𑌤𑌾𑌂 𑌮𑌨𑍀𑌷𑍀
𑌮𑌧𑍁𑌵𑌾𑌕𑍍 𑌜𑌯𑌤𑍀𑌹 𑌸𑍂𑌰𑍍𑌯𑌮𑌧𑍁𑌹𑌂𑌤𑌾 ॥ க ॥

[illegible]

[illegible]
[illegible]
[illegible]
[illegible] ॥ ௪ ॥

[illegible]

[illegible]
[illegible]
[illegible]
[illegible] ॥ ௫ ॥

[illegible]

[illegible]
[illegible]
[illegible]
[illegible] ॥ ௬ ॥

---

இவை

கோயமுத்தூர்

பிரம்மஸ்ரீ. நா. கிருஷ்ணசாமி ஐயர்

சொல்லிய

स्रग्धरा वृत्तम्

हालास्यक्षेत्रवासिद्विज वरमणिभू
स्तस्यगोविन्दसूरे
र्वेदांताद्रिप्रभेत्तुर्मणिशिवपदभा
जश्चशिष्यस्यतस्य
सूनुः पाण्डित्यभूमासुहृदयहृदया
ह्लादकारीमहात्मा
कश्चिज्जेजीयतेऽस्यां भुविकवितिलकः
सूर्यनारायणाख्यः

आर्या वृत्तम्

तदिदं मणिशिवचरितंतेनकृतंभक्तिपूतमनसाच
सम्मनुतेसरसतयामित्रंकृष्णाभिधंप्रेम्णा ॥

स्रग्धरावृत्तम् ।

[illegible]

[illegible] नारायणार्यः ॥

आर्यावृत्तम् ॥

[illegible] ॥

---

இவை

இந்நூலாசிரியரது மாணாக்கருளொருவராகிய

ஜக்கராஜு

பிரம்மஸ்ரீ. ப. வாசுதேவ பந்துலு

சொல்லிய

அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

தேங்கமழும் பூம்பொழில்க ணற்புறமும்
புடைசூழ்ந்த சீர்த்தி வாய்ந்த
மாங்குடியி லவதரித்த மணியசிவ
வள்ளலார் வரம்பின் ஞான
மோங்கிடுநல் விழுமெனுமோ தையிறைழுகு
நடையுடைத்தா யொண்ட மிழ்க்கட்
பாங்கமைந்த வாசகத்திற் சரிதமெனு
மாமுகிலைப் பரிவி னேடும். (1)

விழையுமென தககமலம் விகசிக்கும்
வணம்புரியும் வேதி யன்செங்
கழைமதுரக் கவிபுனையுஞ் சூரியநா
ராயணவேட் கலைஞர் கோமான்
மழைசெறியுங் கற்பகப்பூ மரநீழ
லெழுமேக வாக னன்போற்
றழைசிறைய மடமயிலாஞ் சைவர்களி
கூர்ந்தாடத் தந்தான் மாதோ. (2)

இவை
திருவெவ்வுளூர்
ஸ்ரீ. இராமசாமி செட்டியாரவர்கள் குமாரரும்
இந்நூலாசிரியர் மாணாக்கருளொருவருமாகிய
சலசலோசன செட்டியார்
சொல்லிய

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

சீரியசெவ் விதழிநறுந் தார்ச்சடிலத்
திறைவன்றாள் சிந்தை செய்யு
மாரியனு மாரருளே யுருவெடுத்த
மணியசிவ வமல னுவான்
வேரியநற் கமலமெனுந் தாட்டுணையை
மனமலரின் மிளிரப் பார்க்குஞ்
சூரியநா ராயணவே ளெம்மகவான்
றேன்றுமெழிற் றூய்மை யாளன். (3)

பலகலைக்கும் வரம்பாகிப் பலமொழியும்
பயின்றிட்டுப் பகல வன்போற்
பலகலையை விரித்தெமக்குப் பனிநெடும்பேர்
மருளோட்டும் பாவ லாள
னிலகுமவ னற்சரித மழைபொழியு
மெழிலியதா யிணைந்த சைவப்
பலகதிர்க ணிறைந்தபெரும் பயிர்தழைப்பப்
பொழிந்தனனற் பண்பு கூர்ந்தே. (4)

शिवमयम्

श्रीसुब्रह्मण्यशिवायनमः

नांदि

विनायकस्तुतिः

सत्याचलेशकौमारं
सर्वविघ्ननिवारणं
नित्यानंदंगणाध्यक्षं
निर्विकल्पंभजामहे

आनंदवल्लीस्तुतिः

वसन्ततिलकवृत्तम्

मूलालवालगुहरोपितनादरूपां
फालामलायनगतामणुनाकरन्ध्रे
आलोक्यलास्यमुररीकृतहस्तताळां
कैलासनाथमहिषींकलयेनुवेलं

सुब्रह्मण्यस्तुतिः

सिद्धान्तसुगुरुंवल्ली
देवसेनामनोहरं
शुद्धानन्दंज्ञानमूर्तिं
सुब्रह्मण्यमुपास्महे

உ

𑌶𑌿𑌵𑌮𑌯𑌮𑍍 ॥

𑌶𑍍𑌰𑍀𑌸𑍁𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍍𑌯𑌾𑌯 𑌨𑌮𑌃 ॥

𑌨𑌾𑌨𑍍𑌦𑍀 ॥

𑌵𑌿𑌨𑌾𑌯𑌕𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌃 ॥

𑌸𑌤𑍍𑌯𑌾𑌵𑌬𑍋𑌧𑌕𑌳𑌾𑌧𑌾𑌰𑌂
𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌘𑍍𑌨𑌨𑌿𑌵𑌾𑌰𑌣𑌂 ।
𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌦𑌂𑌗𑌣𑌾𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑌂
𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌘𑍍𑌨𑌂𑌭𑌜𑌾𑌮𑌹𑍇 ॥

𑌆𑌨𑌨𑍍𑌦𑌵𑌲𑍍𑌲𑍀𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌃 ॥

𑌵𑌸𑌨𑍍𑌤𑌤𑌿𑌲𑌕𑌵𑍃𑌤𑍍𑌤𑌮𑍍 ।

𑌮𑍂𑌲𑌾𑌲𑌵𑌾𑌲𑌗𑍁𑌹𑌰𑍋𑌪𑌿𑌤𑌨𑌾𑌦𑌰𑍂𑌪𑌾𑌂
𑌫𑌾𑌲𑌾𑌮𑌲𑌾𑌯𑌨𑌗𑌤𑌾𑌮𑌣𑍁𑌨𑌾𑌕𑌰𑌨𑍍𑌧𑍍𑌰𑍇 ।
𑌆𑌲𑍋𑌕𑍍𑌯𑌲𑌾𑌸𑍍𑌯𑌮𑍁𑌰𑌰𑍀𑌕𑍃𑌤𑌹𑌸𑍍𑌤𑌤𑌾𑌳𑌾𑌂
𑌕𑍈𑌲𑌾𑌸𑌨𑌾𑌥𑌮𑌹𑌿𑌷𑍀𑌂𑌕𑌲𑌯𑍇𑌨𑍁𑌵𑍇𑌲𑌂 ॥

𑌸𑍁𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍍𑌯𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌃

𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑌸𑍁𑌗𑍁𑌰𑍁𑌂𑌵𑌲𑍍𑌲𑍀
𑌦𑍇𑌵𑌸𑍇𑌨𑌾𑌮𑌨𑍋𑌹𑌰𑌂 ।
𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌨𑌨𑍍𑌦𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌂
𑌸𑍁𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍍𑌯𑌮𑍁𑌪𑌾𑌸𑍍𑌮𑌹𑍇 ॥

---

அப்பைய தீக்ஷிதர்

நேற்றமொடு தென்னுட்டிற் றிக்குவிச
யஞ்செய்து திகழ்ந்தி யார்க்குஞ்
சாற்றரிய பன்னூற்குத் தாற்பரிய
சங்கிரகந் தந்தோன் யாவன்
போற்றலுறு மப்பையதீக் கிதநாமம்
பெற்றவொரு புனிதன் யாவ
னுற்றன்மிகு மவன்றனிணை யடிப்போதை
முடிப்போதா யணிந்து கொள்வாம். (7)

ஸ்ரீ மணிய சிவனர்

பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

தித்திக்கும் பழவருக்கு மானசிவா
கமரசத்தைச் சிவர கஸ்யத்
தேனுடனே கூட்டியுப நிடதமெனுங்
கற்கண்டுப் பொடியுஞ் சேர்த்து
மத்தித்து வேதாந்த சூத்திரச்சர்க்
கரையுமிட்டு மணநி றைந்து
வயங்கலுறு சிவஞான போதசூத்
திரநெய்யை வார்த்துக் காய்ச்சி
நத்தித்தீம் பதத்திறக்கி யதற்குவித்தி
யாவிருத்தி நாமஞ் சூட்டி
நானிலத்தா ரெல்லோரு மினிதினிதென்
றேயுண்ண நல்கி னனே

---

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ சுப்பிரமணிய சிவாய நம :

## பாயிரம்

சீகண்ட சிவாசாரியர்

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

கூடியமா ணுக்கர்தமக் கறிவுகொளுத்
திக்குடிலக் கொள்கை யோரைத்
தேடியவர் தமைவாதிற் புறங்காட்டிச்
செலத் தொலைத்துச் சிறந்த வாகை

சூடியநற் சித்தாந்த சைவமத
பாநுவினைச் சுத்தாத் வைத
பாடியஞ்செய் தருளியசீ கண்டசிவா
சாரியரைப் பணிந்து வாழ்வாம். (5)

ஆசாரிய சரணர்

உத்தமமாங் கயிலையினுக் கூர்முழுது
முடன்கூட்டி யொருங்கு சென்ற
சித்தமுட னிருபத்தி ரண்டேது
வாற்பிரமஞ் சிவனே யென்ன
வித்தரணி மீதுபழுப் புறக்காய்ந்த
விருப்புமுக்கா வியின்மே லுற்றுச்
சத்தியஞ்செய் திட்டவர தத்தசிவா
சாரியர்தா டலைமேற் கொள்வாம். (6)

யெத்திக்கும் புகழ்சான்ற முத்திவித்தைச்
சாதகனு மிறைவன் றன்னை
யெமதுகுல மடிமைகொண்ட மணியசிவன்
றன்னையென்று மிதயத் துள்வாம். (8)

குரு வணக்கம்

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

நேக்கியவன் பொருசிறிது மில்லாத
வெந்தமக்குஞ் செவ்வை யாகப்
போக்கருமா ணவம்வீட்டி யெந்தையராய்ப்
போந்தெம்மைப் புனித மாக்கி
வாக்குமனோ தீதபரி பூர்ணசிவ
ஞானத்தின் மகாந்த ரங்கச்
சூக்குமஞ்சொல் கோவிந்த சிவகுரவர்
மலர்ப்பதத்தைத் துதித்து வாழ்வாம். (9)

---

ஸ்ரீ சுப்பிரமண்ய சிவாய நம:

# ஸ்ரீ மணிய சிவனார் சரித்திரம்

ஸ்ரீமத் சகல கல்யாண பரம்பரையினால் ஸமிர்த்தியடைந்திரா நின்ற ஆலாசிய க்ஷேத்திரத்தின்கண், சிதாநந்தர் எனப்பெயருற்ற ஒரு சாம்பவர் சிகாமணி தனது ஞானசிரியராகிய சிதாநந்த வல்லீஸ்வரூப குருவை நமஸ்கரித்து "ஹே! குரோ! அடியேற்குத் தாங்கள் கருணைகூர்ந்து உபதேசித்தருளிய ஸ்ரீ வித்தியாவிருத்திக் கிரந்தத்தை யோதி யுன்னுந்தோறும் இக்கிரந்தமியற்றிய ஸ்ரீ மணிய சிவனார் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திப் பிரசாதத்தாற் சிவ வித்தையை யடைந்து இக்கிரந்தத்தைச் செய்திருத்தல் வேண்டுமெனத் தோன்றுகின்றது. ஆதலின், அச் சிவனாரது சரித்திரத்தை யடியேற்கு எளிதிற் புலப்படும் வண்ணம் திருவருள் புரியவேண்டும்" என்று பிரார்த்தித்தனர்.

அப்போழ்தத்துக் குரு மாணாக்கனை நோக்கி, "ஹே, சிதாநந்தசத் சிஷ்ய! நினது பிரசினம் நினக்கேயன்றி உலகிற்கும் உபகாரமாக இருத்தலின் யான் விசாரித்துணர்ந்த மட்டுங் கூறுகின்றேன், கவனமாய்க்கேட்டி" என்று எம் அருட்பெருங்கடலாகிய சிவனாரது சீவிய சரித்திரத்தைக் கூறுவான்றொடங்கினார்:—

கடல் புடைசூழ்ந்த இவ்வுலகின் கண் சகல தேசங்களினும் சாலவும் மேம்பாடுற்ற பரதகண்டத்தின் தென்றிசையில் "பூவிரிந் தோங்கப் பூவிரித் தோங்கிய, காவிரிமருங்கேய் காவிரி" யாகிய தெய்வத்தன்மை பொருந்திய நதியினால் எந்நாளுங் குன்றாத நீர்வளமுடையதாயும் வாழை, மா, கொய்யா, மாதுளை, பலா, கமுகு, தெங்கு, கரும்பு ஆகிய இவற்றின் சோலைகள் நிரை நிரையாயுள்ளதாயும், மாதவி பாதிரி சண்பகம் அசோகு புன்னை குங்குமம் கோங்கு முதலிய பலவித மரங்களால் நெருங்கப்பெற்று வண்டுகள் ரீங்காரம் பண்ணுகின்றமலர்ப் பொழில்களும், "பாவலரும் நாவல

ரும் பண் மலரக் கண்மலரும்" மல்லிகையும் முல்லையும் நிரம்பிய பூங்காவனங்களும் அன்னங்கள் வாழா நின்ற தாமரைப்பூம் பொய்கைகளும், குமுதம் மலர்ந்த குளங்களும்,

நாழை செறிந்த தடங்கரைத் தடாகமும்
நீல நிறைந்த நிமல வோடையும்
நறுமணங் கமழு நந்தன வனங்களும்
பதுமினிப் பெண்டிர் பாங்கிய ரோடு
வந்து நாடொறுந் துளைந்தாடு வாவியும்
தலைவனுந் தலைவியுந் தமியராய்ப் போந்து
சலக்கிரீ டைசெய்யுந் தண்ணீ ரேரியும்　　(10)

பலவிடங்களிலு முடையதாயும், செந்நெல் முதலிய பயிர்கள் மாறாது விளையும் மருதவயல்கள் அடர்ந்துள்ளதாயும், சிதம்பரம் ஆரூர் குடந்தை மத்தியார்ச்சுனம் சம்புகேச்சுரம் என்பனவாகிய திவ்விய ஸ்தலங்கள் இடையிடையிலுள்ளதாயும், திருமகளுங் கலைமகளுஞ் சேர்ந்தினிதுவிளையாடும் நடநசாலையாயும், இல்லறஞ் சிறிதும் வழுவாது வாழும் அறிவு சான்ற குடிகளுக்கிருப்பிடமாயும், நிலமகளின் திருமுகமண்டலம் போல விளங்கி நிற்பது சோழநாடேயாம்.

இத்தகைய சோணாட்டிற் றஞ்சைமாபுரிக்கடுத்த ஆயிரத்தெட்டு சிவக்ஷேத்திரங்களினின்றுஞ் சிறப்பித்தெடுத் தோதப்பெற்ற ஷோடச க்ஷேத்திரங்களுளொன்றாகிய திருவையாற்றிற்குச் சமீபத்திலுள்ள மாங்குடி யென்னும் புண்ணியபுரியிற் கலியுகம் 4888-ம்ஸு எமது சிவனர் திருவவதாரஞ் செய்தார். அக்காலத்திருந்த பெரியோர்கள் அவரது அவதாரம் பரமசிவாம்சமென்று நிச்சயித்தார்கள். கலியுகம் பிறந்த, ஏழாவது நாள் ஸ்ரீ ஞானசம்பந்த மூர்த்திகளது அவதாரம்; இரண்டாயிரம் வருடங்கட்கு மேற் சங்கராச்சாரியாருடைய அவதாரம்; மூவாயிரமாண்டுகட்கு மேல் ஸ்ரீ ஹரதத்த சிவாசாரியாரது அவதாரம்; நாலாயிரம் வருடங்கழித்து அப்பைய தீக்ஷிதரது அவதாரம்; இவ்வண்ணம் சிவரகசிய நவமாம்சத்தில் இவர்களுடைய சரித்திரத்தை விஸ்தாரமாயுரைத்து

एवंकलावपिभवंति समस्तशैवाः

𑌏𑌵𑌂𑌕𑌲𑌾𑌵𑌪𑌿𑌭𑌵𑌂𑌤𑌿 𑌸𑌮𑌸𑍍𑌤𑌶𑍈𑌵𑌾𑌃

என்று கலியுகத்தில் எவ்வெக்காலத்தில் இதர மதவாதிகளாற் சைவத்திற்கு ஈஷத் லோபம் வருகின்றதோ அவ்வக்காலத்திற் பரமசிவாம்சர்களாக அவதாரஞ் செய்யப்போகின்றூர்களென்று மகேதிகாசத்தில் சொல்லியிருந்தலின் எஞ்சிவனுரையும் மேற்கூறிய ஞானசம்பந்த மூர்த்தாதிகளைப் போலவேவித்தியாப்பியாச விஷயத்திற் குருவில்லாமற் சுயமாகத்தானே சமஸ்த சாஸ்திரங்களிலும் சமர்த்தராக இருந்ததினுற் பரமசிவாம்சாவதாரந்தாமென்று தீர்மானித்தார்கள்.

எமது மணியசிவனுர்க்குப் பாலியத்திலேயே பிதா கைலாச யாத்திரை போகும்படி சம்பவித்தது. சம்பவித்துமென்? பெரிய தந்தையார் பிரமோபதேசஞ் செய்தனர். அதைத் தவிர்த்து எஞ் சிவனுர்க்கு எவரும் எத்தகைய உபதேசமுஞ் செய்திலர்.

இது நிற்க. எமது கருணையங்கடலாகிய ஸ்ரீ மணிய சிவனுர் ஸ்ரீ தக்ஷிணுமூர்த்தி சந்நிதானத்திற் சூத்திரபாஷியத்தைச் சாந்தி பாட புரஸ்ஸரமாக வோதிக் கிருகத்தின்கட் போந்து நாடோறுஞ் சிந்தனை செய்வாராயினர். இவர் இவ்வாறு செய்து வருதலை அவ் வூரிலுள்ள பெரியோர்கள் கண்டுங் கேட்டுங் களிகூர்வாராயினர்கள்.

எமது சிவனுரிங்ஙன மிருந்துவரும் நாளில், அவ்வூர் இராஜாங்கம் சுப்பையரென்ற ஒருவர் துரைத்தனத்தாருக்கு எண்ணுயிரம் ரூபாய் நிலவரி கொடுக்கத்தக்க பூமியுள்ளவராதலின் இச் சிவனுரது யோக்கியதையை யறிந்து தன்னுடைய கன்னிகையை விவாகஞ் செய்துகொடுத்து அவரைத் தன் னுடைய சம்ரக்ஷணையில் வைத்துக் கொண்டார் பிறகு எமது சிவனுர்க்கு நான்கு புத்திரர்களும் நான்கு கன்னிகைகளும் பிறந்தார்கள்.

நம் சிவனுர்க்குக் குடும்பவிசார மில்லாதிருந்ததினுல் சதா சிவாராதனம் செய்கிறதும் சிவக்ஷேத்திரங்களில் நடக்கிற உற்சவங்கட்கு யாத்திரையாகப் புறப்பட்டுத் தரிசனத்துக்குப் போகிற காலங்களி லெல்லாம் மாமனுராற் சமஸ்த உதவிகளும் செய்யப் பட்டிருப்பினும் தாம் பிரபுவினது அங்கத்தைக் காட்டாமல் ஸ்வாமி

வீதியிற் புறப்படுகிற காலத்தில் இடுப்பில் உத்தரீயத்தைக் கட்டிக் கொண்டு சிரத்தில் அஞ்சலிபந்தஞ் செய்துகொண்டு எத்தன்மை யான வெய்யிலாயிருப்பினும் தலையில் வஸ்திரம் போடாமலும், இரவி லெவ்வளவு பனியாயிருந்தாலும் உடம்பில் வஸ்திரம் போடா மலும் பஸ்ம ருத்திராக்ஷ தாரி யாகவும் சிவகதைகளைப் பிரசங்கஞ் செய்துகொண்டு பஸ்ம ருத்திராக்ஷதாரிகளாயுள்ள சிஷ்யர்களுடன் வீதியிலெவ்வளவு புழுதியாயிருப்பினும் சாஷ்டாங்கமாக நமஸ் கரித்து வாகனதிரூடரா யெழுந்தருளா நின்ற பரமசிவனை ஸ்தோத் திரஞ் செய்துகொண்டு வீதிப்பிரதக்ஷிணஞ் செய்கிறதுமான காரி யங்களை யெல்லாங் கண்ணுற்றுச் சில மதவாதிகளாய பிராமணர் களும் பாகவத சிரவணபரர்களான சில யதீசுவரர்களும் எமது மணிய சிவனரைப் பின்வருமாறு தூஷித்துப் பேசினர்கள் :—

"வித்வான்களாகிய புத்திமான்கட்குச் சரீரக்கிலேசமான பக்தியானது அவ்வளவு ஆவசியகமில்லை; சாமானியமான மூடர் களுக்கே பக்தி யேற்பட்டது. இத்தகைய பக்தியை இவர் செய்கிறதி ைல்இவர் விசேஷ ஞானியல்லர். இவர் மிகச் சாமானியமானவர் தாம். ஆலயத்திற்கேகி மூடசனங்களைப்போலப் பக்தி செய்கிற தும், பத்திர புஷ்பங்களைச் சுயமாகக் கிரகிக்கிறதும், லிங்காரா தனஞ் செய்கிறதும், ஸர்வதா பஸ்ம ருத்திராக்ஷ தாரியாக இருக் கிறதும் கேவலங் கருமிகளினது விஷயமே யன்றி ஞானியர் விஷய மன்று ;

प्रतिमा स्वल्पबुद्धीनां

ப்ரதிமா ஸ்வல்பபுத்தீநாம்

என்று கீதை முழங்குதலினிவர் அற்ப புத்தியையுடையவர். மேலுந் தமக்குப் பாகவதத்தின் பொருள் நன்ருய்த் தெரிந்திருப் பின் இவ்வளவு தீவிர பக்திசெய்யமாட்டார்" என்றனர்.

இவ்வாறிவர்கள் தூஷித்தவற்றை யெல்லாம் சில மத்தியஸ் தர்களும் நமது சிவனரது மாணக்கருட் சிலருங் கேள்வியுற்று எம் முடையார்க்குத் தெரிவித் தலும் எம்பெருமான் "அவர்கள் தூஷிப் பனவெல்லாம் லோகோபகாரமென வுணர்திர். யானீண்டிப்போது எடுத்துரைக்கப் போகுந் தத்துவார்த்தங்களைப் பெற்று நீவிரெல் லீரும் கிருதார்த்தர்களாவீர்கள் ஆதலிற் கவலையுடன் கேண்மின்" என்று உபந்நியசிக்கப் புகுந்தார்.

பகவத்கீதையில்:—

अग्नौतिष्ठतिविप्राणां
हृदितिष्ठतियोगिनां
प्रतिमास्वल्पबुद्धीनां
सर्वत्रसमदर्शिनां ॥

𑌅𑌗𑍍𑌨𑍌𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿𑌵𑌿𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌂
𑌹𑍃𑌦𑌿𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌂 ।
𑌪𑍍𑌰𑌤𑌿𑌮𑌾𑌸𑍍𑌵𑌲𑍍𑌪𑌬𑍁𑌦𑍍𑌧𑍀𑌨𑌾𑌂
𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰𑌸𑌮𑌦𑌰𑍍𑌶𑌿𑌨𑌾𑌂 ॥

என்று முழங்குகிற இவ்வசனத்திற்குப் பொருள் வெகு விசேஷமாயுளது. இதன் விசேஷார்த்தம் தெரிந்தவர்கள் பக்தி பண்ணுகிறவர்களைத் தூஷியார்கள். ஆதலின் இதன் விசேடப் பொருளையுணர்ந்து கோடல் நுங்கட்கு மிகவு மாவசியகமாம்.

விசேடப் பொருளாவது:—இதே வாக்கியம் ஈசுவரகீதையிற் சொல்லப்பட் டிருக்கிறது. அதிற் கொஞ்சம் வேற்றுமையுளது. அஃதென்னெனில்:—

अग्नौतिष्टतिविप्राणां
हृदिलिंगेचयोगिनां
प्रतिमास्वल्पबुद्धीनां
सर्वत्रविदितात्मनां ॥

𑌅𑌗𑍍𑌨𑍌𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿𑌵𑌿𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌂
𑌹𑍃𑌦𑌿𑌲𑌿𑌂𑌗𑍇𑌚𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌂 ।
𑌪𑍍𑌰𑌤𑌿𑌮𑌾𑌸𑍍𑌵𑌲𑍍𑌪𑌬𑍁𑌦𑍍𑌧𑍀𑌨𑌾𑌂
𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰𑌵𑌿𑌦𑌿𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌂 ॥

என்பதாம். இரண்டு பாடங்கட்கும் பொருள் சொல்லுவல் கேண்மின். சாமானிய்மாகப் பிராமண குலத்திற் சனித்தவர்கட்கு,

जन्मनाजायतेशूद्रः। कर्मणाजायतेद्विजः

𑌜𑌨𑍍𑌮𑌨𑌾𑌜𑌾𑌯𑌤𑍇𑌶𑍂𑌦𑍍𑌰𑌃। 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌜𑌾𑌯𑌤𑍇𑌦𑍍𑌵𑌿𑌜𑌃

என்றதினும்,

मातर्यग्रेतिजननं
द्वितीयंमौंजिबंधने
तृतीयंयज्ञदीक्षायां
विमस्यविधिचोदितं ||

𑌮𑌾𑌤𑌰𑍍𑌯𑌗𑍍𑌰𑍇𑌤𑌿𑌜𑌨𑌨𑌂
𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌂𑌮𑍌𑌂𑌜𑍀𑌬𑌂𑌧𑌨𑍇 ।
𑌤𑍃𑌤𑍀𑌯𑌂𑌯𑌜𑍍𑌞𑌦𑍀𑌕𑍍𑌷𑌾𑌯𑌾𑌂
𑌵𑌿𑌪𑍍𑌰𑌸𑍍𑌯𑌵𑌿𑌧𑌿𑌚𑍋𑌦𑌿𑌤𑌂 ॥

என்றதினாலும் பிராமணனுக்கு அக்கினியுபாஸ்தியே முக்கியம். அவ்வக்கினியுபாஸ்தியானது பூர்வமீமாம்ச மதரீதியினால்,

मन्त्ररूपंदेवता
𑌮𑌂𑌤𑍍𑌰𑌰𑍂𑌪𑌂 𑌦𑍇𑌵𑌤𑌾

என்று சொல்லியபடி மந்திர ஸம்ஸ்காரத்தினாலும் அக்கினியினுடைய தாரதம்மியம் ஏற்பட்டது. ச்ரௌதாக்கினி, ஸ்மார்த்தாக்கினி, பசநாக்கினி யென்ற பேதங்களானவை மந்திர தாரதம்மியத்தினாலேயே சொல்லப்பட்டிருத்தலின் மந்திரத்தை யத்தியயநம் பண்ணி, மந்திராநுஷ்டாநஞ் செய்வதினாற் பிராமணர்கட்கு மந்திரமே தெய்வமாயிற்று. அம்மந்திரத் தைக்கொண்டு அக்கினியினிடம் ஆகுதி செய்யவேண்டி யிருப்பதினாலும் அதனாலே யவ்வவ் வநுஷ்டாதாக்களுக்கு ஜேஷ்ட கநிஷ்டத்துவம் ஏற்பட்டிருத்தலாலும் அக்கினியே தெய்வமாதல்பற்றி,

अग्नौतिष्टतिविप्राणां
𑌅𑌗𑍍𑌨𑍌𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿𑌵𑌿𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌂

என்றதூஉமென்க.

हृदितिष्टतियोगिनां
𑌹𑍃𑌦𑌿𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌂

என்றது இதற்கு மேற்பட்டதாம். எங்ஙனமெனில்:— இஃது உபாசனாபாகமானதாற் கர்மத்திற்கு மேற்பட்டதேயா மென்க.

हृदिलिंगेचयोगिनां
𑌹𑍃𑌦𑌿𑌲𑌿𑌂𑌗𑍇𑌚𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌂

என்ற பாடம் இதினுஞ் சாலச்சிறந்தது. முற்கூறிய

हृदितिष्टतियोगिनां

𑌹𑍃𑌦𑌿𑌤𑌿𑌷𑍍𑌟𑌤𑌿𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌂

என்ற பாடம் அத்துணைச் சிறப்பினதன்று. எப்படியெனில்:— நான்கு பாதத்திற்கும் பொதுவில் ஒரே கிரியாபதம் போதுமானதால் லிங்காராதநத்தை மறைப்பதற்காகவே திருத்தப்பட்டிருக்க வேண்டும். ஆயினும் அஃது வெகுகால பாடமானதினல் அதையொரு பாடாந்தரமாக வைத்துக்கொண்டு பொருள் கூறுவோம். ஆனல் எமக்குத் தோன்றியமட்டில் ஈசுவர கீதையிலுள்ள,

हृदिलिंगेच

𑌹𑍃𑌦𑌿𑌲𑌿𑌂𑌗𑍇𑌚

என்ற பாடமே சாதுவானது. ஆனதினல்இலிங் கார்ச்சநமுங் கர்மத்திற்கு மேற்பட்டதேயாம். இதற்குப் பிரமாணம் சிவரகசியத்தில் துவிதீயாம்சத்தில்

कर्मवादमिदंश्रौतं
यज्ञाध्ययनसत्क्रियाः
यज्ञैरिष्ट्वामहादेवं
स्मार्तैरपिसदाशिवं
शुद्धस्यकर्मभिर्देवी
ततोभूयादुपासनं
उपासनायांयेधर्माः
स्तान्शृणुत्वमिहांबिके ॥

𑌕𑌰𑍍𑌮𑌵𑌾𑌦𑌮𑌿𑌦𑌂𑌶𑍍𑌰𑍌𑌤𑌂
𑌯𑌜𑍍𑌞𑌾𑌧𑍍𑌯𑌯𑌨𑌸𑌤𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 ।
𑌯𑌜𑍍𑌞𑍈𑌰𑌿𑌷𑍍𑌟𑍍𑌵𑌾𑌮𑌹𑌾𑌦𑍇𑌵𑌂
𑌸𑍍𑌮𑌾𑌰𑍍𑌤𑍈𑌰𑌪𑌿𑌸𑌦𑌾𑌶𑌿𑌵𑌂 ।
𑌶𑍁𑌦𑍍𑌧𑌸𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌭𑌿𑌰𑍍𑌦𑍇𑌵𑍀
𑌤𑌤𑍋𑌭𑍂𑌯𑌾𑌦𑍁𑌪𑌾𑌸𑌨𑌂 ।
𑌉𑌪𑌾𑌸𑌨𑌾𑌯𑌾𑌂𑌯𑍇𑌧𑌰𑍍𑌮𑌾𑌃
𑌸𑍍𑌤𑌾𑌨𑍍𑌶𑍃𑌣𑍁𑌤𑍍𑌵𑌮𑌿𑌹𑌾𑌂𑌬𑌿𑌕𑍇 ॥

என்று ஆரம்பித்துப் பஸ்ம ருத்திராக்ஷதாரணங்களைச் சொல்லி,

ततोलिंगार्चनश्रेष्ठं
बिल्वपत्रैर्महेश्वरि ॥

𑌤𑌤𑍋𑌲𑌿𑌂𑌗𑌾𑌰𑍍𑌚𑌨𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠𑌂
𑌬𑌿𑌲𑍍𑌵𑌪𑌤𑍍𑌰𑍈𑌰𑍍𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌿 ॥

என்று சொல்லி யிருப்பதினுலும், திரிதீயாம்சத்திலும், ஸ்ரீ சைலத்தில் அகஸ்தியராற் சொல்லப்பட்ட வேதபாதஸ்தவத்தில்

येवैदिकस्मार्तविधिप्रयुक्त
क्रियाजलक्षाळनपूतचित्ताः
विभूतिरुद्राक्षविभूषणास्ते
समेनशान्ताश्शिवमाचरंत ।

𑌯𑍇𑌵𑍈𑌦𑌿𑌕𑌸𑍍𑌮𑌾𑌰𑍍𑌤𑌵𑌿𑌧𑌿𑌪𑍍𑌰𑌯𑍁𑌕𑍍𑌤
𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌜𑌲𑌕𑍍𑌷𑌾𑌳𑌨𑌪𑍂𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑌾𑌃 ।
𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌕𑍍𑌷𑌵𑌿𑌭𑍂𑌷𑌣𑌾𑌸𑍍𑌤𑍇
𑌸𑌮𑍇𑌨𑌶𑌾𑌨𑍍𑌤𑌾𑌶𑍍𑌶𑌿𑌵𑌮𑌾𑌚𑌰𑌂𑌤𑌿 ॥

என்பதினுலும் கர்மத்திற்கு மேற்பட்டதே லிங்கார்ச்சநம் என்பது வெள்ளிடை மலைபோல் விளங்குதலுணர்க. இலிங்கார்ச்சநஞ் செய்கிறவர்கள் அக்கிநி கோத்திராதி கர்மசகிதமாகவே செய்தல் வேண்டும். அசக்த விஷயத்திற் கர்மத்தைத் தியாகஞ் செய்யலாம், பஸ்மருத்திராக்ஷ லிங்கார்ச்சநத்தைத்தியாகஞ் செய்யக்கூடாது. இந்தப்பிரகாரம் பஸ்ம ருத்திராக்ஷ தாரண புரஸ்ஸரமாக அவிச்சிந்நமாகப்பன்னிரண்டு சம்வற்சரம் இலிங்கார்ச்சநஞ் செய்தவர்களுக்கே தியாநத்திற் புத்தியுண்டாகும். அதற்குப் பிரமாணம் அந்தத்ருரிதீயாம்சத்திலேயே,

एवंसन्ततयुक्तस्य
शिवध्यानेभवेन्मतिः ॥

𑌏𑌵𑌂𑌸𑌨𑍍𑌤𑌤𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯
𑌶𑌿𑌵𑌧𑍍𑌯𑌾𑌨𑍇𑌭𑌵𑍇𑌨𑍍𑌮𑌤𑌿𑌃 ॥

என்பதினுற் பூஜைக்கு மேற்பட்டதாகத் தியாநத்தைச் சொல்லியிருப்பதினுலே இந்த லிங்கார்ச்ச நம் அங்கபூஜையே தவிர அங்கியர்ச்சநமாக மாட்டாது. அங்கார்ச்சநமாவது ஆயிரத்தெட்டுவிதமாம். அங்கியர்ச்சனமோவெனில் மூவிதமாம். அவைதாம் சாம்பவ பாசுபத

மகா சைவங்களென்று சிறப்பித்துச் சொல்லப் பட்டிருக்கின்றன. அங்கார்ச்சநமானது வழக்கத்திற் கேவலஞ் சைவமாகச் சொல்லப்படுகின்றது. அஃதாயிரத்தெட்டு விதப்படுவயாங்ஙனமெனில் :— பூலோகத்திலுள்ள ஆயிரத்தெட்டு சிவக்ஷேத்திரங்களிலுள்ள சிவலிங்கத்திலிருக்கிற பரமசிவனை இருதயத்திலெண்ணி,

हृत्पद्मकर्णिका मध्यात्
उमयासहशंकर ।
आगच्छत्वंमहादेव
सर्वैरावरणैस्सह ॥

" 𑌹𑍃𑌤𑍍𑌪𑌦𑍍𑌮𑌕𑌰𑍍𑌣𑌿𑌕𑌾𑌮𑌧𑍍𑌯𑌾𑌤𑍍
𑌉𑌮𑌯𑌾𑌸𑌹𑌶𑌂𑌕𑌰 ।
𑌆𑌗𑌚𑍍𑌛𑌤𑍍𑌵𑌂𑌮𑌹𑌾𑌦𑍇𑌵
𑌸𑌰𑍍𑌵𑍈𑌰𑌾𑌵𑌰𑌣𑍈𑌸𑍍𑌸𑌹 ॥ "

என்று பார்த்திவ லிங்கத்தில் அந்தந்த க்ஷேத்திரங்களிலுள்ள தேவீதேவர்களுடைய நாமதேயங்களாற் பூசித்தல் வேண்டும். அஃதாவது ஆலாசிய க்ஷேத்திரத்தில் மீநாக்ஷீ சுந்தரேசுவரரையும் காசியில் விசாலாக்ஷீ சமேத விசுவநாதரையும் பூசித்தல் வேண்டும். இதுதான்,

हृदिलिंगेच योगिनां

𑌹𑍃𑌦𑌿𑌲𑌿𑌂𑌗𑍇𑌚𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌂

என்பதன் பொருளாம்.

हृदितिष्टति योगिनां

𑌹𑍃𑌦𑌿𑌤𑌿𑌷𑍍𑌟𑌤𑌿𑌯𑍋𑌗𑌿𑌨𑌾𑌂

என்று பாடமோதில், யோகிகளுக்கு ஹ்ருதயத்தில் நிரவயவராயும் பரசித்ரூபராயும் ஜோதிஸ்வரூபியாயுஞ் சிந்தித்தல் வேண்டுமென்பது பொருளாம்.

இஃது சகுணோபாஸ்திக்குக் கீழ்ப்பட்டது. இதற்குப் பிரமாணம்,

यज्ञदानादिभिःपुण्यै
योगसिद्धिर्भविष्यति ।
ततोयोगासिवंध्यानं
ऐश्वर्यज्ञानसाधनं ॥

யஜ்ஞதாநாதிபி꞉புண்யை
யோகஸித்திர்பவிஷ்யதி ।
ததோயோகாஸிவம்த்யாநம்
ஐஸ்வர்யஜ்ஞாநஸாதநம் ॥

என்னுஞ் சூதசங்கிதை வாக்கியத்தினின்றும் பெறுக. சகுணத்தியா நாத்மகமாயுள்ள சிவபூசைக்கு மேற்பட்டது ஆலய பூசை. ஆதியாத்மிகத்தைக் காட்டிலும் ஆதிபௌதி கோபாஸ்தியானது சிரேஷ்டமாம். இவ்வாறே தகர வித்தையிற் கூறப்பட்டுளது.

प्रतिमास्वल्पबुद्धिनां

ப்ரதிமாஸ்வல்பபுத்தீநாம்

என்ற விடத்திற் குறிப்பிக்கப்பட்டது ஆதிபௌதிக லிங்கோபாஸ்தியேயாம். க்ஷேத்திரத்திலுள்ள ஈசுவரனை ஹிருதயத்தில் தியானித்து ஆத்மார்த்த லிங்கத்திற் சுயமாகப் பூசிப்பது ஆதியாத்மிகமாம். க்ஷேத்திரத்திலுள்ள ஈசுவரனை அவ்வவ்வர்ச்சகர்களிடத்தில், திரவியார்ப்பண புரஸ்ஸரமாகப் பூசை செய்வித்துச் சுயமாகப் பிரதக்ஷிண நமஸ்காரஞ் செய்கிறது ஆதிபௌதிகமாம். தகர வித்தையின்கட் பத்தாவது சுலோகத்தில்,

स्थानेस्वपूजादिकं

ஸ்தாநேஸ்வபூஜாதிகம்

என்று கூறியிருத்தலு மறிக. இவ்வாதி பௌதி கோபாஸ்தியானது ஆதியாத்மிகோபாஸ்தியைக் காட்டிலும் மேலானதாயினும் இவ்வாதி பௌதிகோபாஸகர்களைத் தாம் அல்பபுத்தியை யுடையவர்களென்று சொல்லியிருக்கிறது. மேற்கூறிய கர்மிகள் யோகிகளாகிய இவர்கட்கு ஆதிபௌதி கோபாசகர்கள் மேற்பட்டவர்களாயினும் இனிக் கூறப்போகிறசர்வத்ர விதிதாத்மாக்களை நோக்கின் இவர்கள் அல்பபுத்தியை யுடையவர்களேயாம் என்க. மகா வாக்கியப் பிரகரணத்திற் பன்னிரண்டாவது சுலோகத்தில்,

स्वाभिव्यंजकतोल्प एषः

ஸ்வாபிவ்யஞ்ஜகதோல்ப ஏஷ:

என்று கூறியபடி அல்பமாயுள்ள அபிவியஞ்சகஸ்தானத்தில் உபாசிக்கிறவர்களையே

अल्पबुद्धीनां

அல்பபுத்தீநாம்

என்று சொல்லியபடியாம். ஆகவே,

प्रतिमास्वल्पबुद्धीनां

ப்ரதிமாஸ்வல்ப புத்தீநாம்

என்றவிடத்தில் அல்பஸ்தானத்திலுள்ள பிரதிமைகளிலிருக்கிற ஈசுவரனிடத்திற் புத்தி பற்றினவர்களென்று பொருள்கோடலே சாமஞ்சஸமாம். இன்னும் தகரவித்தையின்கட் பன்னிரண்டாவது சுலோகத்தில்,

अज्ञातोखिलकः कर्मवविधितोनाराषं लिंगाधिके ।
धुवादर्शस्फटिकांशुवत्

அஜ்ஞாதோகிலக: கர்மவவிதிதோநாராஷம்
லிங்காதிகே த்ருவாதர்ஶஸ்படிகாம்ஶுவத் ॥

என்றவிடத்தில் சர்வத்ர வியாபகமாயுள்ள சொரூபந் தெரியமாட்டாது. அதிகரணஸ்தமாயுள்ள சொரூபங்கள் தெரியும், அதில் ஆன்மார்த்த லிங்க பூசையைக் காட்டிலும் மனுஷ்யஸ்தாபித முதலாக சித்தலிங்க பரியந்தமுள்ள லிங்கங்களில் தாரதம்மியங்களிருக்கின்றன; இதுதான் சைவமதம்; இஃது அண்டாந்தர்க்கத கைலாசலோகத்திற் சாலோக்ய சாமீப்ய சாரூப்ய மென்ற முக்திகளைக் கொடுக்கத் தக்கது என்று சொல்லப்பட்டிருக்கிறது. மேற் கூறிய தகரவித்தை பதினோராவது சுலோகத்தில்

शैवंशैवपदेत्रिमोक्षदमिदं

ஶைவம் ஶைவபதே த்ரிமோக்ஷதமிதம்

என்று சொல்லியிருத்தலுங்காண்க. இந்தப் பதத்திற்குப் புனராவிர்த்தியுண்டு.

प्रतिमास्वल्पबुद्धीनां

ப்ரதிமாஸ்வல்ப புத்தீநாம்

என்பதன் பொருள் ஒருவாற்றான் முடிந்தது.

सर्वत्रविदितात्मनां

ஸர்வத்ரவிதிதாத்மநாம்

என்பதின் பொருள் கூறுதூஉம்.

सर्वत्रसमदर्शिनां

ஸர்வத்ரஸமதர்ஶிநாம்

இனி நான்காம் பாதமாகிய,

என்பதூஉம் பாடம். மாயாவியாப்தமான பிரபஞ்சமும், ஷடத்வ மாயோபாதிக பிரபஞ்சாதீதஸ்தானமும், சுத்தமாயோபாதிக பிரமகோசஸ்தானமும், மாயாரகித நிர்க்குணஸ்தானமுமாகிய இவையிற்றின்கண், அவ்வப்பிரிவுகளின் பிரகாரம் அறிந்து பூஜிக்கிறவர்கள்தாம் சர்வத்ர விதிதாத்மாக்கள்.

समदर्शिनां

ஸமதர்ஶிநாம்

என்று பாடமோதில், மாயைக்கு ஊர்த்துவமான ஸ்தானத்தி லுள்ள சிதம்சமானது சமம். அவ்விடத்தில்மாயையை விலக்கிச் சமமாகப் பார்க்கிறவர்கள் சமதரிசிகள் என்று பொருள் கொள்ள வேண்டும். இதை யொழித்து மாயா சம்பந்தஸ்தானங்கள் மாயா ரகித ஸ்தானமாகிய இவ்விருபகுப்பு ஸ்தானங்களிலுஞ் சமமாகப் பார்க்கிறவர்களென்று பொருள்கூறின் அஃதசங்கதமாம். மேற் கூறியவற்றின் விரிவுகளைத் தெரிந்தவர்கள்தாம் ஞானிகளென்று தகரவித்தையின் மேற்கூறிய சுலோகாந்தியத்திற் சொல்லியிருக் கின்றது.

ज्ञानान्महाशैवकन्तश्चाध्यात्मिकमाधिभौतिक मुलपसार्षित्व सायुज्यते

ஜ்ஞாநாந்மஹாஶைவகந்தஶ்சாத்யாத்மிகமாதிபௌதிக
முலபஸார்ஷித்வஸாயுஜ்யதே

என்பதாம்.

ஞானமாவது நவாவரணயுக்தமாகச் சிவபெருமானை யுபாசித்த லாம். அஃதெங்ஙனமோவெனில்:— ஆயிரத்தெட்டுச் சிவாலயங் களிலுமுள்ள லிங்கங்களைப் சிவரகஸ்யம் பிரதமாம்சத்திற் சொல்லி

யிருக்கிற நாமதேயப்பிரகாரம் பூஜிப்பது. அசக்தவிஷயத்தில் * ஷோடசக்ஷேத்திரங்களிலுள்ள இலிங்கங்களைப் பூசிப்பது பிரதமாவரண பூசை. அநேககோடி பிரமாண்டங்களிருப்பதினால் ஒவ்வொரு அண்டத்திலும் லிங்கங்கள் இதுபோலவே சமமாயிருப்பினும், பிருதிவீதத்துவத்திலுள்ள அண்டத்தின் லிங்கங்களைப் பூசித்து அபிமான க்ஷேத்திரங்களிலுள்ள லிங்கங்களையும் பூசித்த பிரதமாவரண பூசைகலாதத்துவம் வரையிலுமுள்ள அண்டங்களிலுள்ள லிங்கங்களின் பிரதமாவரண பூசைக்குப் பிரதிநிதியாகும். மகேசதத்துவத்திலுள்ள கணேச சுப்பிரமணிய ஈசுவர நிர்க்குண ருத்திரபஞ்ச விம்சதீ மூர்த்திகளைப் பூசிப்பது துவிதீயாவரணபூசை. அதற்குமேல் சதாசிவ மநோன்மநி பூசை திரிதீயாவரணம். அதற்குமேற் சக்திதத்துவத்திலுள்ள மகா ஷோடசீ பூசை துரீயாவரணம். அதற்குமேற் கர்த்திருசாதாக்கிய மூர்த்திசாதாக்கிய மேரு ரூபங்களாயுள்ள ஷோடசீ பூசைகள் பஞ்சமாவரணம். இதற்குமேல் நிர்க்குண தக்ஷிணாமூர்த்தி பூசை ஷஷ்டாவரணம். நிர்க்குண நடராஜபூசை சப்தமாவரணம். நிர்க்குண உமாசகாயபூசை அஷ்டமாவரணம். நிர்க்குண சிற்சக்தி நிர்க்குண சில்லிங்க பூசை நவமாவரணம். இந்தப் பிரகாரம் பூசிக்கிறவர்கள் சர்வத்ரவிதிதாத்மாக்கள். இவர்கள் தாம் சமதரிசிகள். அக்கினியுபாஸ்தி, ஹ்ருதயோபாஸ்தி, பாகியமாயுள்ள ஆலய லிங்கோபாஸ்தி சகிதமாக மேற்சொன்ன நவாவரண பூசைசெய்கிறவர்கள் யதீசுவரர்களுக்கும் மேம்பட்டவர்கள். இவ்விஷயம் முக்தி வித்தியாப் பிரகரணத்தில் ஆறாவது சுலோகத்திற்சொல்லப்பட்டுளது.

* ஷோடக்ஷேத்திரங்களின் பெயரையும்

चिदम्बकाशीजनवनृमहेशो
हालास्यकैलासगिरित्रयेशान।
कांच्यग्निवृध्दाचलजंबुजप्य
कुंभार्जुनत्यागपतींश्चनौमि ॥

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

என்ற சுலோகத்தாலுணர்க.

மேற்படி பிரகரணத்தில் ஐந்தாவது சுலோகத்திற் பூசாத்தியாகிகளுக்குச் சொல்லிய நரகயாதனையானது அந்நிய மதஸ்தராயிருந்து கொண்டு சிவார்ச்சனத்தியாகஞ் செய்தவர்களுக்கேயாம். சாம்பவாதிகளுக்கோ வெனின் விதிதாத்மாக்களாதலின் அவர்கட்குத் தோஷம் நேரிடாது. அதவா ஏகதேசத்திற் ப்ரவனுதாரட்டியத்தானுதல் அசக்தவிஷயத்தானுதல் நேரிட்ட தோஷத்தையவர்கட்குக் கீழ்பட்டவர்கள் ஊகிக்கக்கூடாது. ஏனென்னிற் கர்மடர்கட்குத் தோஷம் நேரிடில் எமதண்டனை; யதீஸ்வரர்கட்கு இந்திர தண்டனை; சிவபக்தர்கட்கோவென்று லிவர்களது தண்டனை யொருநாளுமில்லை. ஆனுற் காணுபத்தியத் தின்மட்டுந் தாரதம்மியமேற்படும். மகாசைவர்கட்கு அத்வபாரலோகத்தின்கண் மகா சைவோபாஸ்தி செய்யவேண்டியது. அவ்விடத்திற் செய்கிற பூசாபலத்தால் அதற்கு மூன்ருவதாயலோகத்திற் சாயுஜ்ஜியம் கிடைக்கின்றது. ஆனுல் இதற்குக் கீழ்ப்பட்ட சொர்க்கப்பிரம விஷ்ணு அண்டாந்தர்க்கத கைலாச லோகங்களுக்கு அவ்வவ்விடங்களில் லிங்கபூசை யிருந்தாலும் அவ்விலிங்கபூசை அதற்குமேற்பட்ட பதவியிற்குப் புண்ணிய வேதுவாகமாட்டாது. அத்வபாரலோகத்திற் செய்கிற பூசைக்கு மாத்திரம் சாயுச்சியமுண்டு. இத்தகைய சாம்பவாதிகட்கு வர்ணுசிரம தர்மத்தியாகமும், கிரியாத்தியாகமும் நேரிடினும் பஸ்மதாரணத்தாற் சரிதார்த்தமுண்டு. குடீசகாதிகட்குப் புண்டரபேதஞ் சொல்லும் விஷயம் வைஷ்ணவ பக்ஷம். சாம்பவாதிகட்குச் சர்வாசிரமங்களினும் பஸ்மத்திரிபுண்டர தாரணமேயாவசியகமாம். பூசாவிஷயத்தில் பாகியார்ச்சநங் குடீசகபகூதக தர்மமாம், ஆந்தரார்ச்சநம் ஹம்ஸ பரமஹம்சதர்மம். இதில் மகாவாக்கிய தீபிகாப்பிரகரணம் முப்பத்தைந்து முப்பத்தாருவது சுலோகங்களில்,

योग्योनग्निरुपासनेजपसुस्वैरत्याश्रमीरैक्वत्

[illegible]

என்றும்,

कार्यावृत्तिरुपासनस्यसततंहार्दा खिलस्येश्वरोहार्दानुग्रहवानशे

षविकृति । ब्रह्मादिलोकाध्वनो धृत्वाग्निर्येजगति तृतीयमगमत्

[illegible]
[illegible]
[illegible] ॥

என்றும் இருதயத்தில் உபாசிப்பது முக்கியமாம். சோகம்பாவனா பட்சம் துரீயாதீத அவதூததர்மம். இதுவும் ஹ்ருதயோபாஸ்தி தான். சுவசரீரத்தை லிங்கமாகப் பாவித்து லிங்கோப சாரங்களெல்லாஞ் சரீரத்திலும், மூர்த்தியர்ச்சகங்களெல்லாம் அவ்வவ தாரங்களிலுள்ள மூர்த்திகளிலுஞ் செய்வதுதான் சோகம்பாவனை யாம். இனிச்சோகம் பாவனாப்பிரகார மின்னதெனக் கூறுது உம்:—இருதயத்தில் அநேக கோடிப் பிரமாண்டங்களிலுள்ள க்ஷேத்திர பூசைகளான பிரதமாவரணபூசை செய்ய வேண்டியது. விசுத்திஸ்தானத்திற் கணபதி சுப்பிரமணிய ஈசுவர நிர்க்குண ருத்திர பஞ்சவிம்சதி மூர்த்திகளாயுள்ள துவிதீயாவரணபூசை செய்ய வேண்டியது. ஆஞ்ஞா ஸ்தானத்திற் சதாசிவபூசை செய்தல் வேண்டும். பிரமரந்திரத்தின்கண் உள்ள சூட்சுமாதாரங்களிற் சூரியமண்டலத்திற் கர்த்திருசாதாக்கிய பூசையும், சந்திர மண்டலத்தில் ஷோடசி பூசையும், வந்நிமண்டலத்தின் மூர்த்தி சாதாக்கிய பூசையும், சம்விந்மண்டலத்திற் குருபூசையும், விந்து மண்டலத்தில் நடராஜ பூசையும், நாதமண்டலத்தில் உமாசகாய பூசையும், துவாத சாந்தத்தில் நிர்க்குணலிங்க பூசையுஞ் செய்தல் வேண்டும். இவ்வாறு செய்கிறவர்கள்தாம் பரமாவதூதர்களென் போர்.

இத்தகைய பரமாவதூதர்களும் உற்சவகாலங்களில் வீதியி லெழுந்தருளுகின்ற மூர்த்தியை வணங்குதல் வேண்டும். இம்மண் ணுலகிலொரு விஸ்தாரமும் வெளிச்சமுமுள்ள பொட்டலின்கண் கிருகமொன்று கட்டப்பட்டிருக்குமாயிற் கிருகத்துக்குள் இருட்டும் கிருகத்துக்கு வெளியில் வெளிச்சமு மிருத்தல்போல இச்சகத்திற் குள் மாயா சம்பந்தமான இருட்டும் இதற்கு வெளியில் வெளிச்சமு மிருக்கின்றன. இருணிறைந்த கிருகத்தின்கண் தீபம் வைத்தது போலக்கலாதியவநி பரியந்தமுள்ள தத்துவங்களில் இருக்கிற, மாயாவியாப்தமான பிரமாண்டங்

களில் அநேக லிங்கரூபியாகச் சிவபெருமான் அநுப்பிரவேசஞ் செய்திருப்பதினால் அச்சோதி சொரூபத்தை ஞானிகள்தாம் அறி

கின்றார்கள். நேத்திரமில்லாத அந்தகனுக்கு இருட்டும் வெளிச்சமுந்தெரியாதிருத்தல்போல அஞ்ஞானிகட்கு மாயையாகிய இருட்டும் லிங்கங்களிலுள்ள பிராசமுந் தெரியமாட்டா. உற்சவகாலத்தில் தெருக்களில் எழுந்தருளா நின்ற மூர்த்தியினிடத்தில் மூல லிங்கத்திலுள்ள சதாசிவ சொருபமானது சம்பந்தித்துவருதலின் அக்காலத்தில் மூர்த்தி தரிசனமே செய்தல் வேண்டும். மூலலிங்க தரிசனஞ் செய்யக்கூடாது. இதற்குப்பிரமாணம்,

ग्रामाद्बाह्येतदन्तस्थे
मण्डपस्थेमहेश्वरे
नित्यार्चनेधिकेकाले ।
तत्कर्तुमुभयोरपि ॥

𑌗𑍍𑌰𑌾𑌮𑌾𑌦𑍍𑌬𑌾𑌹𑍍𑌯𑍇𑌤𑌦𑌨𑍍𑌤𑌸𑍍𑌥𑍇
𑌮𑌣𑍍𑌡𑌪𑌸𑍍𑌥𑍇𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑍇 ।
𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌰𑍍𑌚𑌨𑍇𑌧𑌿𑌕𑍇𑌕𑌾𑌲𑍇
𑌤𑌤𑍍𑌕𑌰𑍍𑌤𑍁𑌮𑍁𑌭𑌯𑍋𑌰𑌪𑌿 ॥

என்பதாம். ஆலயத்தினின்றுந் துவாதச தண்டமாநத்திற் கப்பாலேகிய மூர்த்தியினிடத்திலேயே ஈசுவர சாந்நித்தியமாதலின்,

वीथ्यंतरेषुदेवेशं
नस्वयंलिंगदर्शनम्
प्रमादाद्दर्शनंमोहात्
भार्यापुत्रौविनश्यतः ॥

𑌵𑍀𑌥𑍍𑌯𑌂𑌤𑌰𑍇𑌷𑍁𑌦𑍇𑌵𑍇𑌶𑌂
𑌨𑌸𑍍𑌵𑌯𑌂𑌲𑌿𑌂𑌗𑌦𑌰𑍍𑌶𑌨𑌂 ।
𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌾𑌦𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌂𑌮𑍋𑌹𑌾𑌤𑍍
𑌭𑌾𑌰𑍍𑌯𑌾𑌪𑍁𑌤𑍍𑌰𑍌𑌵𑌿𑌨𑌶𑍍𑌯𑌤𑌃 ॥

என்று மூலஸ்தான தரிசனத்திற்குத் தோஷமேற்பட்டிருத்தல் காண்க. மேலும் ஈசுவரசாந்நித்தியமுள்ள விடங்களில் ஸ்பிருஷ்டி தோஷமில்லை. இதற்குப் பிரமாணம் :—

देवालयसमीपस्थान्
देवसेवार्थमागतान् ।
चण्डाळान्पतितान्वापि
स्पृष्ट्वानस्नानमाचरेत् ॥

தேவாலயஸமீபஸ்தாந் ।
தேவஸேவார்த்தமாகதாந் ।
சண்டாளாந்பதிதாந்வாபி
ஸ்ப்ருஷ்ட்வாநஸ்நாநமாசரேத் ॥

என்பதனாற் பெறுக. இங்ஙனங்கூறிய வரம்பு கடந்துநடப் போர்க்கு

आलयेवामदेवस्य
यस्नायात्स्पर्शशंकया ।
सप्रयातिनरोघोरं
नरकंकालमक्षयं ॥

ஆலயேவாமதேவஸ்ய
யஸ்நாயாத்ஸ்பர்ஶஶங்கயா ।
ஸப்ரயாதிநரோகோரம்
நரகங்காலமக்ஷயம் ॥

என்று தண்டனையும் ஏற்பட்டுளது.

சூத்திரன் வேதத்தைக் காதாற்கேட்டால் ஈயவரக்குக்களை யுருக்கி யிருகாதுகளிலும் விடவேண்டியதாயிருக்க வீதியிற்போகிற சுவாமியோடுகூடச் செல்லுகிற பிராமணர்கள் வேதத்தை யுச்சஸ்வரமாகச் சொல்லவேண்டிய தென்னை? என்று கேட்டால்,

उत्सवंकारयेद्धीमान् । वेदपारायणैस्सह
உத்ஸவங்காரயேத்தீமாந் । வேதபாராயணைஸ்ஸஹ

என்ற சிவரகசிய வாக்கியத்தை யாதாரமாகக்கொண்டு

धरणिविबुधास्सहस्रशो
धृतहस्तांगुलयःपरस्परं ।
निगमान्निगदंतिसुस्वरं
निगमांतांश्चनितांतशिक्षिताः ॥

ப்ராணிவ்யாப்யஸ்ய ஸர்வஸ்ய தா
ஊர்த்வஸ்யாம் மூர்த்திஸம்ஸ்ரயாத்।
நிர்கதா நிர்கதம் திஸ்யாஸ்யாம்
நிர்கதம் தாம்ஸ்து நிர்கதம் தஸ்மிந்கதா:॥

என்று மகாகவிகளாற் கூறப்பட்டிருத்தலின் ஆலயத்தைவிட்டு வெளியேறி வருகிற மூர்த்தியினுடைய தேஜஸ்ஸினல் அங்ஙனம் வேதத்தைக் கேட்கத்தகாத சூத்திரர்களும் வியாப்தியா யிருக்கின்ருர்களாதலின் அக்காலத்தில் அச்சூத்திரர் முதலாயினரும் பரிசுத்தர்களே யாவார்கள். ஆகையால் அப்பொழுது வேதம் அவர்கள் காதிற் படலாம் என்று கூறும் விஷயம் ஞானிகட்கே தெரியும். ஏனைய மூடர்கட்குத் தெரியமாட்டாதென்க.

எத்தன்மையானவர்களும் உற்சவதரிசநம் முக்கியமாகச் செய்தல்வேண்டுமென்னுங் கருத்தை யுட்கொண்டன்றே,

उत्सवंसेवमानस्य ! मुक्तिःकरगताभवेत्

உத்ஸவம்ஸேவமாநஸ்ய । முக்தி:கரகதாபவேத்

என்று சூதசமுகிதை முழங்குகின்றது.

இஃதுடன்,

अग्नौ तिष्ठति विप्राणां

அக்நௌ திஷ்டதி விப்ராணாம்

என்ற கீதா வசனத்தின் பொருள் ஒருவாற்ருன்முடிவு பெற்றது என்று எமது சிவனார் திருவாய் மலர்ந்தருளினர். தேவரு மனிதரும்

“ உரைத்த வாசகங் கேட்டுவந் தோங்கின
ரிரைத்த காதல ரேகிய வின்னலர்
திரித்த கோலினர் தேமறை பாடினர்
திருத்த மாடினர் நின்று துதித்தனர் ”

இவ்வாறு சிவனார் கூறிய பொருளை யுணர்ந்து பலருந் தத்தமது மாணக்கர்கட்குப் போதிப்பராயினர். முன் சிவனாரைத் தூஷித்தவரெல்லா மிப்பொருளினைக் கேட்டதும் பொருமை பிடர் பிடித்துந்தவே அவ்விடத்திருந்த சுயம்பிரகாச சுவாமிகள் என்ற

வொரு சந்நியாசியாரிடஞ் சென்று "மணியசிவன் என்னும் அபி தானமுடையவொரு சிவபக்தர்

अग्नौ तिष्ठति विप्राणां

𑌅𑌗𑍍𑌨𑍌 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 𑌵𑌿𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌂

என்ற இதோ வாக்கியத்திற்குக் கிலிஷ்டகற்பனையாக விபரீதார்த் தஞ் சொல்லுகின்றனர். அதுபற்றி மயங்கிப் பலரும் அவரை மகாவித்வானென்று புகழ்கின்றார்கள். ஆதலின் நீவிர் அவரைப் பரீட்சித்தல் வேண்டும்." என்று சந்நியாசியாரைப் பிரார்த்தித் தனர். அப்போது சுவாமியார் சிறிது நேரம் ஆலோசனை செய்த தன் பிறகு,

सर्वं विष्णुमयं सदाशिववपुर्व्यक्तंपुराणोदितं

𑌸𑌰𑍍𑌵𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌮𑌯𑌂 𑌸𑌦𑌾𑌶𑌿𑌵𑌵𑌪𑍁𑌰𑍍𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌂𑌪𑍁𑌰𑌾𑌣𑍋𑌦𑌿𑌤𑌂

என்றதைக் கடையடியாகக்கொண்டு சுலோகத்தினைப் பூர்ணப் படுத்துமாறு சிவனார்க்கு அனுப்புவித்தனர். இச்சமஸ்யையினை யொரு புரஸ்கூடப் பிராமணன் சிவனாரது அப்பியங்ககாலத்திற் காட்டினன். உடனே சிவனாரும் அச்சமஸ்யையினைப் பின்வருமாறு பூர்ணப்படுத்தி அந்தப் பிராமணனிடங் கொடுத்தனுப்பினர் :—

पादेविष्णुविलोचनंकटितटे
श्रीनारसिंह्मासनं
हारेकूर्मशिरोलसत्करतले
कङ्काळनामायुधम् ।
शूलाग्रेशवकेशवंहरिशिरो
मालांततन्मौलिना
सर्वंविष्णुमयंसदाशिववपुर्व्यक्तं
पुराणोदितं ॥

𑌪𑌾𑌦𑍇𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌵𑌿𑌲𑍋𑌚𑌨𑌂𑌕𑌟𑌿𑌤𑌟𑍇
𑌶𑍍𑌰𑍀𑌨𑌾𑌰𑌸𑌿𑌂𑌹𑍍𑌮𑌾𑌸𑌨𑌂
𑌹𑌾𑌰𑍇𑌕𑍂𑌰𑍍𑌮𑌶𑌿𑌰𑍋𑌲𑌸𑌤𑍍𑌕𑌰𑌤𑌲𑍇
𑌕𑌙𑍍𑌕𑌾𑌳𑌨𑌾𑌮𑌾𑌯𑍁𑌧𑌮𑍍 ।

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

என்று சிவனார் தமது சமஸ்யையினைப் பூர்ணப்படுத்தியதனைக் கேட்டுச் சுவாமிகள் அளவிலா ஆநந்தமடைந்து கழிபெருங்களியாட்டயரா நின்றனர். பிறகு சிறிது நேரஞ் சென்ற பின்றை, சிவாமிகள் சிவனாரை நேரேகண்டு உரையாடல் வேண்டுமென்று சொல்லிய போது சமீபத்திலிருந்த சிஷ்யர்கள் "நுங்கட்கு அச் சிவனார் வந்தனஞ்செய்ய மாட்டாரே! அங்ஙனமிருக்க நீங்களெவ்வாறு அவருடன் பேசுதல்கூடும்?" என்றார்கள். அப்போது சுவாமிகள் அதற்கோருத்தியுளதென்று சொல்லிப் பஞ்சநத க்ஷேத்திரத்திற் சிவனார் சுவாமி தரிசநத்திற்கு வருமுன் நந்தி கேசுவரருக்கு எதிரே பூர்வாபி முகமாயுட்கார்ந்திருந்தனர். சிறிது நேரத்திற்கெல்லாஞ் சிவனாரும் ஆலயத்திற் புகுந்து,

"नंदिशंकरयोर्मध्ये दण्डवत्प्रणतोभुवि ।"
[illegible]

என்ற நியாயப்படி சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து எழுந்தார்கள். உடனே சுவாமிகளும் எழுந்து நின்று "எப்போது வரவு" என்று சிவனாரைக் குசலப்பிரசிநஞ் செய்தார்கள். "இப்போது தான்" என்று சிவனார் பிரதியுத்தரஞ் சொல்லினர். உடனேயிருவரும் விதிப்பிரகாரஞ் சுவாமிதரிசநஞ் செய்து குருமூர்த்தி சந்நிதாநத்தில் பஞ்சாட்சர ஜபஞ்செய்கிற காலத்திற் ஒருவர்க்கொருவர் சாஸ்திரங்களில் வாக்கியர்த்த விசாரணை செய்து கொண்டனர். அக்காலத்தில் அருகிலிருந்த வித்துவான்களெல்லாஞ் சிவனாரது வாக்ஜரியைக்கேட்டுத் தம்பிதர்களாய் விட்டனர். அவர்கட்குப் பொழுது போனதொன்றுந் தெரியவில்லை. அப்போது ஆலய பூசகர்கள் "பூசாகாலங்கழித்து வெகுநேரமாயிற்றே, கதவடைத்தல் வேண்டுவேண்டுமே" யென்று கேட்டுக்கொண்டவளவிற் சுவாமிகள் மிகவும் சந்தோஷப்பட்டுப் பூர்வாசாரியார்களைப் போலவே யிச்சிவனாரும் அவதாராம்சை யென்று களிப்புமீக்கூர்ந்து சொல்லியேகினர்.

சுவாமிக ளிவ்வாறு கூறிய கூற்றினைச் செவியுற்ற மற்சரி கள், "உலகம் புகழுஞ் சுயம்பிரகாச சுவாமிகளும் இச்சிவனரை அவதாராம்சை யென்று ஒப்புக்கொண்டனரே! இதற்கு வேறெ ன்ன யுக்தி செய்யலாம்" என்று ஆலோசித்துச் சிவனரது சிஷ் யர்களிடத்தில் "நுங்கட்கு ஆசிரியராயுள்ள சிவனர் பாகவதபுரா ணத்திற்கு அர்த்தஞ் சொல்லுவாராயின் அவரை வித்துவான் என்று யாங்கள் கூறுவதற்கோர் ஆட்சேபனையுமிராது, ஆனலவர் அதற்குப் பொருள் கூறுமாற்ற லில்லாதவர் என்றே தோன்று கின்றது" என்று அவர்கள் சொல்லியவெல்லா மெஞ்சிவனர் திருச்செவியிற் கேட்டலும், மீரட்டூர் என்னுங் கிராமத்தில் வித்துவ சபை சேர்த்து அவ்விடத்தில், தினந்தோறும் இரவில் தமது அநுட் டானமுடித்த பிறகு கருணைநிதியாகிய மணியசிவவள்ளலார் பாக வதார்த்தஞ் சொல்ல உபக்கிரமித்தார்கள். அச்சபையின்கட் புத்தகம் வாசிப்பவ ரொருவர், வியாக்கியானத்தைக் கையில் வைத் துக்கொண்டு எம்சிவனர் கூறும்பொருளைச் சரிபார்ப்பவர் இருவர், சுரோதாக்கள் வித்துவான்களாயுள்ள சந்நியாசியர் பன்னிருவர், மற்றைய கிருகஸ்தர்கள் கணக்கற்றவர்கள். இத்தகைய வித்துவ சிம்மக்குழாத்துள் மகாசரப மணியசிவனர் வியாக்கியாந புஸ்த கத்திலுள்ள பொருளினைத் தாமே முன்னர்க்கூறி,அங்ஙனந் தாம் கூறியது சரிதான வென்று கேட்டு, வியாக்கியான புஸ்தகத்தைக் கையில் வைத்துக் கொண்டு சரி பார்ப்பவர் இருவரும் சரியென வொப் புக்கொண்டதன்மேல்,

तदसाधु

தஸாது

(அது சரியன்று) என்று சொல்லித் தாம் வேறு பொருள் விஸ்தாரமாக நாடோறுங் கூறுவாராயினர். முதலாவது சுலோ கத்தில்,

ईश्वर

ஈச்வர

என்ற சப்தத்திற்குச் சதுர்வேத தாற்பரிய சங்கிரகத்திற் சொல்லி யிருக்கிற ஈசுவரதத்துவ லக்ஷணத்தை யெடுத்துரைத்து வித்தியா விருத்தி அபரவித்தியாப்பிரகரணத்திற் பதினைந்தாவது சுலோகத்

திற் சொல்லியிருக்கிற எழு ஹேதுக்களையு முபபாதித்துப் பரம சிவனே ஈசுவர சப்தத்திற்குரியவராதலின் இப்பாகவத நாந்தி சுலோகத்துச்சொல்லிய ஈசுவர சப்தத்தினாற் பாகவதத்தினுடைய மகாதாற்பரியம் பரமசிவபரமென்று வலியுறுத்தினர். இவ்வண்ண மே தினந்தோறும் சிவோத்கர்ஷமாகவே பொருளுரைத்து வருகையில் பிரமஸ்துதி வருகிற தினத்தில் விசேடமாகப் பூக் கூடார முதலான அலங்காரங்கள் செய்து, "பிரமஸ்துதியில் வரு கின்ற சுலோகத்திற்கு இவரென்ன பொருட்கூறுவர்? இவர் இதுகாறுங் கூறிப்போந்த சிவோத்கர்ஷமானது அச்சுலோகத் தின்கண் சரிப்படாதே! அவ்விடம் எஞ்சிவனுரை அவமானஞ் செய்துவிடுகிறது" என்று நினைத்துக் கபடமாக நிரம்பவும் பக்தி யுடன் கேட்டார்கள். அச்சுலோகமென்னெனில்,

यच्छौचनिस्सृतसरित् प्रवरोदकेनतीर्थे
नमूर्ध्निविधृतेनशिवश्शिवोभूत्

[illegible]
[illegible]

என்பதாம். இச்சுலோகத்திற்கு "விஷ்ணுபதோத்பவமான கங்கா தீர்த்தத்தைச் சிவன் தனது சிரத்திற் றரித்ததினாற் சிவன் சிவ னாகவாயினார்" என்ற எதிரிகளின் பொருளைக் கண்டித்துச் "சாளக் ராம தீர்த்தத்தைச் சிரத்திற் புரோக்ஷணஞ் செய்துகொண்டாற் பாபியாயுள்ளவன் பாபியாக ஆகமாட்டான். அதாவது புண்ணி யவானாவான் என்றபடியாம்" என்ற பொருள் கூறினர் "அப் பொருள் யாங்ஙனம் பெற்றீரெனி:—கூறுதூஉம். திரிதீயாந்த மென நீவிர் நினைக்கின்ற மூன்று பதத்தையும், சப்தமியாகப் பதச்சேதஞ் செய்து, ஆண்டுள்ள மூன்று நகாரத்தி லிரண்டைக் கிரியையிலேயும் ஒன்றினைச் சிவசப்தத்திலேயும் அந்நுவயித்துக் கொள்ளிற் பெறலாமென்க.

"यच्छौचनिस्सृतसरित्प्रवरोदकेतीर्थे
मूर्ध्निविधृतेसतिनशिवःनशिवोभूदितिन"

[illegible]
[illegible]

என்றாகும். இதன்பொருளை விளங்குதற் பொருட்டுமீட்டுங் கூறி தூஉம்:— 'சாளக்கிராமத்தினுடைய அபிஷேகத்தாற் பெருகா

நின்று சரித்ப்ரவரம் (கங்கை) போன்ற உதகத்தை யுடையது யாது? அஃது சிரத்தின்கட் புரோட்சணஞ் செய்யப்படுமேயானாற் பாபியாயுள்ளவன் பாபியாகிறானில்லை. அதாவது சுத்தனாகின்றானென்றபடியாம்,' என்று கூறியருளினர். "இவ்வாறு கண்ணழிவு செய்துரையாவிடின் சிவபுராணங்கட்கு மாறுபடுமென்க. ஆதலின் இதுவே யிச்சுலோகத்தின் பொருளாமாறு காண்க. இப்பொருளினால் விஷ்ணுவின் மகிமைக்கும் விஷ்ணு புராணங்கட்கும் விரோதமில்லை. விஷ்ணுபாதோத்பவ கங்கையானது சிவபெருமானாற் றரிக்கப்படவேயில்லை. அக்கங்கை திரிவிக்கிரமாவதார காலத்திற் பூமியை யோரடியாகவும் ஆகாயத்தை மற்றோரடியாகவும் அளந்த காலத்திற் காற்பெருவிரல் நகத்தால் அண்டகடாகம் பேதிக்கப்பட்டு விஷ்ணுவினுடைய பாதத்தில் வீழ்ந்து மாளவதேசமார்க்கமாகப் பச்சிம சமுத்திரத்தை யடைந்தது. இஃது மகாஜலௌகமானதனால் உடனே யத்துவாரத்தைத் திருவிக்கிரமர் அடைத்துவிட்டார். இதற்குப் பிரமாணம் சிவரகசியம் துவிதியாம்சத்திற் கைலாச பர்வதத்தில் ஹிமவானுக்குப் பூகோளம் விசிஷ்டத்தையும் நந்திகேசுவரர் காட்டுகிற கட்டத்தில்

अन्याविक्रमतोविष्णोः
पादतोनिर्गतानः ।
गंगाद्वारात्प्रतीच्याब्धिं
संगतामाळवांतिमे ॥

"𑌅𑌨𑍍𑌯𑌾𑌵𑌿𑌕𑍍𑌰𑌮𑌤𑍋𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃
𑌪𑌾𑌦𑌤𑍋𑌨𑌿𑌰𑍍𑌗𑌤𑌾𑌨𑌃 ।
𑌗𑌂𑌗𑌾𑌦𑍍𑌵𑌾𑌰𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌤𑍀𑌚𑍍𑌯𑌾𑌬𑍍𑌧𑌿𑌂
𑌸𑌂𑌗𑌤𑌾𑌮𑌾𑌳𑌵𑌾𑌂𑌤𑌿𑌮𑍇 ॥"

என்று சொல்லிப் பகீரத தவத்தினால் வந்திருக்கிற கங்கையைப் பற்றிக் கூறுகின்றார். அஃதென்னெனில்;—

इयंगर्वभराक्रांता
ईशेनशशिमौलिना ।
जटाकोटीरनिलयां
चक्रेसाचविसर्जिता ॥

"ஜயம்ஶ்வஶுர்க்ஷாம்ஜர்
ஶம்ஶோநஶஶிஜ்ஞரா।
ஜடாகோடீரதிஷ்டா(ம்)॥
வஶ்க்ஷலா வலிலஜித்ர॥"

என்பதாம். இவ்வாறே பிரமதர்க்கஸ்தவத்தில் ஸ்ரீ அப்பய தீக்ஷிதரவர்களினாலே விசாரிக்கப்பட்டுளது. இந்தப் பாகீரத கங்கையுண்டானதற்கு மூலம் தக்ஷகாண்டத்தில், ஒருகால் அம்பாளுடைய ஹஸ்தங்களினாற் சிவபெருமானுடைய திருக்கண்கள் புதைக்கப்பட்டன. உடனே சுவாமியினது திரிதீய நேத்திரம் விழித்தது. அந்த நேத்திரத்தின் சுவாலாசமநார்த்தமாக அம்பாளுடைய அங்குலிகளினின்றும் கங்கையை யெம்பெருமான் உண்டாக்கினார். அக்கங்கையானது சமஸ்த சகத்தையு முழுகடிக்கற் பான்மையதா யிருந்தது. அப்போது தேவர்களினுடைய பிரார்த்தனைக் கிணங்கிச் சிவபெருமான் தமது சிரத்திற்றரித்துக் கொண்டனர். இது பற்றியன்றே யெம்பெருமான் கங்காதரரானது. அவ்வாறு தரித்துக் கொண்டபோது பிரமதேவர் தமது குண்டிகையிற் சிறிது கங்கையினைச் சுவாமியினிடத்திற் பிரார்த்தித்துப் பெற்றுக்கொண்டுபோய் அதைச் சத்தியலோகத்திற் குண்டிகையினின்றும் பெருகவிட்டார். அதுதான் ஆகாய முழுவதும் பிலாவனம்செய்துகொண்டு ஆகாசகங்கையாக விளங்கியது. இஃதுதான் பகீரத தவத்தாற் பூமியில்வந்து காசிவிசுவநாதர் சந்நிதியில் முக்தியைக் கொடுப்பதாக விளங்குகின்றது. விஷ்ணு பாதோத்பவ கங்கையதன்று. இதை விஷ்ணு பாதோத்பவ கங்கையாகப் பிரவசநிப்பவர் மூடரேயாவர். கீழ்க்கூறிய

यच्छौचनिस्सृत
"யச்சௌசநிஸ்ஸ்ருத"

என்ற சுலோகத்திற்கு "இவ்வாறு அந்நுவயித்துப் பொருளுரைத்ததுபோல உரைத்தலே பாகவதத்தின் சுபாவ" மென்று அநேக உதாரணங்கள் சொல்வதைக் கேட்டு இம் மணிய சிவனார் பரமசிவாம்சாவதாரந்தாமென்று ஒத்துக்கொண்டு அதிபக்தியுடன் புராண சிரவணஞ் செய்தார்கள். சமாப்தி தினத்தில் நிரம்ப மரியாதை செய்வதாக உத்தேசித்துச் சகலரும் யத்தனித்திருக்கின்றார்கள் என்பதைச் சிவனாருணர்ந்து மத்தியாந்நத்திலேயே தமது

கிருகத்திற் சமாப்தி செய்துவிட்டுச் சம்மாநம் யாவற்றையும் படநஞ் செய்தவருக்குச் செய்யும்படி யுத்தரவு கொடுத்து அவ்வாறே நிறைவேற்றினர்கள்.

இதுகேட்ட தஞ்சாவூர்ச் சரபோஜிமகாராஜா அவர்கள் எம் சிவனரை வரவழைத்துப் பதினாயிரம்ரூபாய் பெறுமான கிராமம் தானஞ் செய்கிறதாக உத்தேசித்துச் சொல்லியனுப்பினர். அதைச் சிவனர் கேள்வியுற்று, "யான் இராசதரிசநஞ் செய்கிறது மில்லை, இராசப்பிரதிக்கிரகம் வாங்குகிறதுமில்லை" என்று கூறி விடுத்தார். அதன்மேல் இவர் மகாநிஸ்பிருகர் என்று கொண்டாடியரசன் முதல் யாவரும் நிரம்ப பக்தியுடையவராயினர்.

இவ்விதமாக எமது மணிய சிவனரது கீர்த்தியெத்திக்கும் பரந்து சென்றுவரு நாளிற் சிலசாம்பவர்கள் சிவனரது பலத்தை வைத்துக்கொண்டு சந்நியாசியர் மடங்கடோறுஞ்சென்று ஆண்டுள்ள கோபீவஸ்திராபகார சித்திரத்தை யழித்து அவ்விடமிருந்த யதீசுவரர்களையும் நிர்ப்பந்தப்படுத்தி வந்தார்கள். அவர்கள் நிர்ப்பந்தப் படுத்தியது யாங்ஙனமெனில்:—"நுங்கட்குச் சாந்தி பாடம் முக்கியமாயுள் ளது, அதையொழித்துவிட்டுப் பாகவதத்தைக் கைக்கொள்வ தென்னேயோ? மேலும் பாகவத தசமஸ்கந்தத்தி லென்ன தத்துவ முளது? பாஷியங்கடிநமா யிருப்பின் சூதசமுகிதை முதலிய புராண சிரவணஞ் செய்தல் வேண்டும். ஏனெனில் சூதசமுகிதையை அஷ்டாதசாவிர்த்தி பாராயணஞ் செய்து ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் பாஷியஞ் செய்ததாகச் சொல்லப்பட்டுளது. ஆதலின் உங்கட்குச் சூதசமுகிதையே முக்கியம். பாகவதசிரவணஞ் செய்ய வேண்டுவதில்லை" என்றபடியாம். இவ்வாறு அவர்கள் செய்த நிர்ப்பந்தத்தைச் சகிக்கமாட்டாமற் சில யதீசுவரர்களும் சில கிருகஸ்தர்களும் ஆலோசித்து "ஓகோ சைவம் பலத்துவிட்டது! இதற்கு முக்கிய காரணமாயுள்ளவர் இந்த மணிய சிவனரே. அவரை வித்தையாற் சயிப்பதற்குப் பற்பலகாலும் யாம் முயன்று பார்த்தும் முடியவில்லை. இனியென்செய்வது? ஆபிசாரப் பிரயோகத்தால்தான் அவரைச் சங்கரித்தல் வேண்டும்" என்று நிச்சயஞ் செய்துகொண்டார்கள்.

இவ்வாறிவர்கள் நிச்சயித்த பிறகு நிருசிம்மசுவாமிகளென்ற ஒரு சந்நியாசியாரைச் சிவனர்மீது ஆபிசாரஞ் செய்யுமாறு

வேண்டினார்கள். அப்போது நிருசிம்ம சந்நியாசியார், "எனக்குப் பூர்வாச்சிரமத்தில் நிருசிம்ம விஷயத்தில் அஷ்டகர்மப் பிரயோகமுந் தெரியும்; அவை சித்தியாயு மிருக்கின்றன, சுவாமியும் பிரத்தியக்ஷம். ஆயினும் பூர்வாச் சிரமத்திலாயின் திரவிய சம்பாதநத்துக்காக அந்நியரதேவலாற் செய்யலாம். ஆனால் நீவிர் சொல்லுகிற விஷயம் மத சம்பந்தமானதனால் மதங்களுக்குச் சில காலம் உத்கர்ஷமும் சில காலங்குறைவுஞ் சுபாவந்தானே! அதைப் பூர்த்தி செய்வதற்குத் தேவதைகளே சகாயஞ் செய்வார்களே! என் செய்வது?" என்று தர்க்கித்தனர். அதற்கிவர்கள் "சாக்ஷாத் மகா விஷ்ணுவே ராமகிருஷ்ணவதாரங்களில் க்ஷத்திரியகுலமானதனால் தனக்கு மேற்பட்டவர்ணாசிரம தர்மமுடைய வசிஷ்ட அகஸ்திய விசுவாமித்திர உபமந்நியு முதலானவர்களை நமஸ்கரித் திருக்கின்றனர். அங்ஙனமிருக்க இச் சிவனார் கிருகஸ்தராயிருந்தும் யதீசுவரர்களை வந்தனஞ் செய்யாமலிருக்கின்றனர். ஆதலின் நீவிர் அம்மாங்குடிக் கிராமத்திற்கு யாத்திரையாகச் சென்று அவரோடு நீவிர் சல்லாபஞ் செய்கிற காலத்தில் அவரும்மை வந்தனஞ் செய்யாதிருப்பின் நீவிர் அக்கோபத்தைக் காரணமாய்க்கொண்டு அவர்மீது ஆபிசாரஞ் செய்தல் வேண்டும்" என்று கூறிய சமாதானத்தினைச் சந்நியாசியார் கேட்டு நல்லதென் றிணங்கி அவர்கட்கு வாக்குத்தத்தஞ் செய்தனர். அவர்களும் மாங்குடிக்குச் சென்று சந்நியாசியார் வரவினையெதிர்பார்த்திருந்தனர்.

மறுநாள் மாலைப்பொழுதில் மேற்கூறிய சந்நியாசியார் வெகு ஆடம்பரத்தோடும் மாங்குடிக்குப் போந்தனர். அவ்வேளை நமது மணிய சிவனார் தமது வீட்டுவாயிற் றெற்றியிலுள்ள மாப்பிள்ளைத் தலை யணையிற் சாய்ந்து பாதங்களைத் தெருவை நோக்க நீட்டிக்கொண்டு வித்தியாவிருத்திக் கிரந்த மெழுதிக் கொண்டிருந்தனர். இவரிவ்வாறு கிரந்தமெழுதுவதிற் கருத்துப்பதிந்திருப்ப நிருசிம்ம சந்நியாசியார் மகாபடாடோபப் பொலிவோடும் வீதி வழியாகப் போயினர். அவர் அங்ஙனம் போதலைச் சிவனார் பார்த்திலர். மறுபடியும் மேற்குறித்த சந்நியாசியார் திரும்பிச் சிவனாரகத்துத் தெற்றியோரமாக வந்தனர். அதையுமெஞ்சிவனார் பார்த்திலர். உடனே சந்நியாசியாரும் சிவனார் கிருகத்துக் குட்டித் தெற்றியில் வந்து உட்கார்ந்தனர் சிவனாரது மகிமை யினை

யிவ்வுலகினுக்குத் தெரிவிப்பதற்கன்றே! சந்நியாசியார் வந்து உட்கார்ந்த அப்போதுதான் சிவனரும் பார்த்தனர். உடனே தமது பாதங்களை மடக்கிக்கொண்டு இருந்துழியிருந்தே, "சுவாமிக ளெப்போது வருகை?" என்று குசலப் பிரசிநஞ் செய்தனர். சுவாமிகள் வெகுகோபத்துடன் "நானிரண்டுதரஞ் சமீபத்தில் வந்தும் நீவிர் ஏனென்னைக் கவனித்திலிர்? யதீசுவரர்மாட்டு அவ்வண்ணம் உதா சீநமாக நீவிரெங்ஙன மிருக்கலாம்?" என்று வினவியகாலை, சிவனர், "யான் நீவிர்கூறுமாறு உதாசீ நஞ் செய்திலேன். வேற்று ஞாபகமாய்க் கிரந்தமெழுதிக் கொண்டிருந்தேன்" என்று விடையளித்து வாளாவிருத்தலை நோக்கிச் சுவாமிகள், "அஃதொருபுறமிருக்க நீவிர் கிருகஸ்தராயிருந்தும் ஏனிப்பொழுதாதல் வந்தனஞ்செய்கிலிர்? இப்போதாவது வந்தனஞ் செய்வீரேற் கோபத்தைப் பரிகாரஞ் செய்கின்றேன். இல்லையேற் கோபாவேச மெனக்கு அதிகமாகும்" என்று மிகவும் அகங்காரத்தோடு அதட்டிப்பேசினர். அதனைச் சகிக்க வொண்ணமல், சந்தமதி வதநத்தி லெப்பொழுதினுங் குறைவில் சந்

यतींनांकोपचण्डाल:
"யதீநாம்கோபசண்டாலஃ"

தோஷமுடைய சிவனர் மந்தகாசத்தோடு என்று திருவாய்மலர்ந்தருளினர். அதற்குச் சுவாமிகள்,

सर्वचण्डालदूषक:
"ஸர்வசண்டால தூஷகஃ"

என்று மகோக்கிரத்துடன் கூறவே சமீபத்திலிருந்த சிவனரது சிஷ்யர்கள் ஓடிவந்து, "ஓ! சுவாமிகாள் எமது சிவனரைச்சாமாநியராக நினைத்தலொழிமின்! வேண்டுதிரேல் நுமக்குயாங்கள் வந்தனஞ் செய்கின்ரோம். எங்கட்கு நீவிர் ஆச்சிரமத்திற் பெரியவர் தாம். சிவனர் மகாசைவோபாசகராதலின் உமக்கு மேலானவராகவே அவர் உமக்கு வந்தனஞ்செய்தல் அசம்பாவிதமாம். இது விஷயமாகத் திருட்டாந்த மொன்று சொல்லுகின்ரோம் கேட்டிர்:— ஸ்ரீமத் ஆதிசங்கராசாரியார் செய்த அத்துவித பாஷியத்தை மிசிரர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. அப்போது ஆசாரிய சுவாமிகள் பரமசிவனைத் தியானித்தலும் சிவபெருமான் சுப்பிரசந்நமாகி, யோக நாமலிங்கம், புக்திலிங்கம், முக்திலிங்கம், மோக்ஷ

லிங்கம், வரலிங்கம் என ஐந்து இலிங்கங்களைக்கொடுத்து இவற்றின் பூசையினுன் மிசிரரைச்சயிக்கலாமென்று கூறிய பரம சிவாஜ்ஞாப்பிரகாரம் பூசித்து அவர்களைச் சயித்து வெற்றிக் கொடி நாட்டி யொவ்வொருதாநத்திலு மொவ்வொரு சிஷ்யரைத் தாபநஞ்செய்து அவ்விலிங்கங்களை ஒவ்வொருவருக்கும் ஒவ்வொன்ருகக் கொடுத்துத் தக்ஷிணதேசத்திற் காஞ்சிநகரத்திற் பதினறு சம்வற்சரம் யோககாமலிங்கத்தைப் பூசித்துக் கொண்டிருந்து அந்தியகாலத்திற் சுரேசுவரா சாரியாரிடத்தி லிங்கத்தைக் கொடுத்து இலிங்கத்தைப் பரம்பரையாகப் பூசிக்குமாறும் ஆசாரவிசாரணை செய்யுமாறும் உத்தர வளித்து அக்காஞ்சியிற்ருனே சித்தியடைந்தனர். இரண்டாயிரம் ஆண்டு கிரமித்ததன் மேல் அந்தப் பரம்பரையில் இருந்த ஓராசாரிய சுவாமிகள் ஸ்ரீ அப்பையதீக்ஷிதரவர்கள் சிவாம்சமாக அவதாரஞ்செய்து திக்குவிஜயம் பண்ணிக்கொண்டு வருகிறகாலத்தில் தமது மடத்திற்கு வரும்படி தீக்ஷிதர்க்கு ஸ்ரீமுகமனுப்பினுர். அவ்வாறே தீக்ஷிதரவர்களும் புறப்பட்டு மடத்தைநோக்கி வருகையில், சுவாமிகள் தீக்ஷிதரவர்கள் வந்தாற் சிறிது காலமேனுஞ் சல்லாபஞ் செய்யவேண்டியிருக்குமே யென்று நினைத்துத் தீக்ஷிதரவர்கள் வருவதற்கு முன்னரே பாதப் பிரக்ஷாளந லகுசங்கா நிவர்த்திக்காகப் புறப்பட்டுச் சென்ருர்கள். அவ்வாறு ஆசாரிய சுவாமிகள் போயிருந்தபோது தீக்ஷிதரவர்களும் மடத்திற்குட் போந்து சுவாமிகளெங்கென வினவலும், காரியஸ்தர்கள், "சுவாமிகள் லகுசங்கா நிவிர்த்திக்காகப் போயிருக்கின்ருர்கள்; சீக்கிரத்தில் வந்துவிடுவார்கள்" என்று சொல்லிப் பீடம் கொடுத்து உட்காருமாறு வேண்டினுர்கள். அப்போது தீக்ஷிதரவர்கள் சுவாமிகள் வருமட்டும் காத்துக்கொண்டிராமற் சுவாமிகள் உட்காருகிற பீடத்தை வந்தனஞ்செய்து மடத்தைவிட்டுத் திரும்பி விட்டார்கள். உடனே ஆசாரிய சுவாமிகளும் வந்து தீக்ஷிதரவர்கள் எங்குற்றனர்களென்று கேட்டபோது, தீக்ஷிதரவர்கள் உங்களது பீடத்தை வந்தனஞ் செய்துவிட்டு வெளியே போய்விட்டார்கள் என்று சொல்லியதைக் கேட்டலும் பீடமிருக்கிற ஸ்தானத்தை வந்து பார்க்கும்போது பீடமிரண்டாக வெடித்து அதிலிருந்த கஷாயவஸ்திரமு மெரிந்திருந்தது! அதில் வைத்திருந்த தண்டமு மிரண்டாகப் பிளந்திருந்தது! இவற்றைக்

கண்ணுற்ற ஆசாரியசுவாமிகள், "நம்முடைய சரீரமுமிந்தப் பீடத்திலிருந்ததாயின் தண்ட கஷாயங்கட்குக் கிடைத்த கதிதான் அதற்குங் கிடைத்திருக்கு" மென்று நினைத்துத் தீக்ஷிதரவர்களை வந்தனஞ்செய்யுமாறு நிர்ப்பந்திக்கவில்லை. இக்கதையினை நீவிர் கேட்டுமிலீரோ? அவ்வப்பைய தீக்ஷிதரவர்களைப் போலவே யிம் மணிய சிவனாரும் பரமசிவாம்சாவதாரந்தாம். பிரகிருதத்திலும் மகாசைவாநுஷ்டா நம் பதினேழுமந்திர புரஸ்ஸரமாக நவாவரண பூசை செய்கின்றார். அவ்விஷயங்களி லெல்லாம் உமக்கென்ன தெரியும்? இப்போது சிவனார் உம்மை வந்தனம் பண்ணினால் உம்முடைய சிரம் வெடித்துப் போய்விடும்" என்று கூறினார்கள். இது செவியிற் பட்டவளவிற் சந்நியாசியார் இம்மெனவெழுந்து புகை பறக்கின்ற மூக்கராயும் பொறி பறக்கின்ற கண்ணராயும் நகைபிறக்கின்ற வாயராயும் நின்று நாக்கொடுகடைவாய் நக்கி "இம்மணிய சிவனாரது வந்தனத்தாலென் றலைவெடிப்ப திருக்கட்டும். நுமது ஆசிரியராயுள்ள இச்சிவனாரது சிரம் வெடித்துப் போமாறு யான் ஆபிசாரப் பிரயோகஞ் செய்கிறேன். அதற்கு நீவிரெனக்குக் கூடநின்று உதவி புரியுங்கள்" என்று பேரரவ மிட்டுக் கூவினார். இவ்வாறழன்று சந்நியாசியார் வீறாரவாரஞ் செய்தலை யெல்லாம் புன்னகையோடு கேட்டுக்கொண்டிருந்த சுந்தரானந்த சொரூபியான மணிய சிவனார், "ஓ! சுவாமிகாள், நுமது குருவின்மேலாலணைப்படி நீவிர் ஆபிசாரஞ் செய்வீர்" என்று விடையளித்து விட்டுத் தமது மைத்துனரு மாணாக்கரு மாகிய இராசாங்கம் அண்ணாவையரைவிளித்து "இச்சந்நியாசியார் கேட்கும் வேப்பெண்ணெய் முதலான ஆபிசார சாமக்கிரியைகளை யெல்லாங் கொடுக்கக்கடவாய்! அங்ஙனங் கொடாதிருப்பாயாயில் உனக்குக் குருத்துரோகஞ் சம்பவிக்கு" மென்று பிரதிக்கினை செய்தனர். இவ்வாறு தமது ஆசிரியரும் தமக்கையார் தலைவரு மாகிய மணியசிவனார் றியதைக் கேட்டுப் பயந்து நடுநடுங்கித் தமது பிதாவாகிய இராசாங்கம் சுப்பையரிடம் சென்று அண்ணாவையர் ஆலோசனை செய்தார். அப்போதாண்டுக் குழீஇயிருந்த பெரியோர்களெல்லாரும் "ஆறு நூறாயினும் நூறு ஆறாயினுஞ் சரி; நமக்குச் சிவனாரது வாக்கியமே முக்கியம்; ஏனென்றால், நம் சிவனார்க் கொருகாலும் பாதகம் நேரிடாது" என்று கூறினார்கள். உடனே யிராசாங்கம் அண்ணாவையரும் சந்நியாசியாருக்

குச் சமஸ்த உதவியுஞ் செய்வதாகத் தீர்மானித்து, அச்சந்நியாசியார்க்கு ஒரு பாழ்ங்கிருகத்தைக் கொடுத்து, அவர்க்கு ஆபிசாரத்திற்கு வேண்டிய சாமக்கிரியைகளும் ஈந்து, அவர்க்குப் பிக்ஷையுஞ் செய்வித்தனர். இஃதிப்படியிருக்க, இவற்றை யெல்லாங் கேள்வியுற்ற அவ்வூரிலிருந்த அந்தணாளரிற் சிலர் குதிக்கத் தொடங்கினர். சிலர் மணிய சிவனாரது கொட்டமெல்லாம் இன்றோடு ஒடுங்கியது" என்று கூறுவார்! கல்லென்று சிரிப்பார்! களிப்பினால் ஒருவரை யொருவர் தழுவுவார்! வேறு சிலர் "மணிய சிவனாரும் இலேசானவரில்லை. இச் சந்நியாசியாரைப் போல ஆயிரம்பேரைப் பார்த்திருப்பார். இவற்றிற்கெல்லாம் அஞ்சுகிறவரா அவர்?" என்று சிவனாரை உயர்த்திப் பேசுவார்! மற்றுஞ் சிலர் "நாம் ஒருவரோடொருவர் பேசுவானேன்" எல்லாந் தன்னைப்போல விடிந்தாற் தெரியும்? என்பார்! இன்னுஞ் சிலர் "மணிய சிவனார் என்ன செய்கிறாரென்று அவ்வழியாகப் போய்ப் பார்த்துவிட்டு வருவோம்" என்று புறப்பட்டுச் சிவனாரது வீட்டுவாயிற் பக்கமாக வந்து ஒற்றுக்கேட்டுவிட்டுப் போவார்!

இவ்வாறாகப் பலரும் பலவிதமாய்ப் பேசாநிற்ப ஊர்முழுதும் உல்லோல கல்லோலப்பட்டது. இங்ஙனமிது கிடக்க, ஊரிலுள்ள ஸ்திரீகளெல்லாம் நமது மணிய சிவனாரது தர்மபத்நியாரிடம் போந்து பின்வருமாறு துக்கம் விசாரிக்கத் தொடங்கினார்கள். ஒருத்தி "என்னை நின் தலைவர்க்கு இவ்வண்ணம் புத்தி போயிற்று?" என்பாள்! ஒருத்தி "எஃதெப்படி யிருப்பினும் நின் கணவர் செய்தது தவறே" யென்பாள்! மற்றொருத்தி "நின்னுயகர்க்கும் முரண்டேன்? சுவாமிகளைத்தான் ஒரு நமஸ்காரஞ் செய்துவிட்டால்தா னென்னை?" யென்பாள்! இன்னொருத்தி "என்னவோ? அவரவர் புத்தி சாவவுஞ் செய்யும் பிழைக்கவுஞ் செய்யும். நாம் சொல்லியா ஆகப்போகின்றது?" என்பாள்! இன்னுமொரு மாது "எல்லாவற்றிற்கும் யானொன்று சொல்லுகின்றேன், வேண்டுமென்றாற் கேட்டுக்கொள். சீக்கிரமாய்ச் சென்று உன்னுடைய புருஷர் பாதங்களிலே சாஷ்டாங்கமாய் வீழ்ந்து ஒரு வரங்கேள். அவரும் உன்மேல் அன்புள்ளவரானால் உடனே தருவார். தந்தவுடனே நீங்கள் எனக்காகவாவது சுவாமிகளிடம்போய் ஒரு நமஸ்காரஞ் செய்துவிட்டு வருவீர்கள்

என்று கேட்டால் ஒருவேளை யிணங்கிச் சுவாமிகளை வணங்குவார். அப்போது சகலமும் சரியாய்ப்போம்" என்பாள்! இந்தப் பிரகாரம், இராமாயணத்திற்கூறிய கூனியினும் மிகப் பேர்படைத்த பல கூனிகள் போன்று எமது சிவனரது மனைவியார் மனத்தினைக் கைவசப்படுத்தப் பார்த்தும், முடியவில்லை. ஏனெனிற் சிவனரது தலைவியாரும் இராமாயணத்திற் சிறப்பித்துச் சொல்லப்படுங் கைகேசியாராவரோ? ஆகார். ஆதலினவர்கள் கூறியனவெல்லாம் எழிலிபோய்க் கானலிற் பெய்வதாயின. தம்மிடத்திற்குப் போந்த அலகைப் பேடுகளெல்லாம் போயபின்றைச் சிவனரது வாழ்க்கைத் துணைவியாரும் சிவனரிடம் வந்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, "அடியேன் ஒரு ஸ்திரீ ஜன்மமாதலிற் சிறிது சபலப்படுகின்றேன். அச்சபலம் நீங்குதற் பொருட்டுத் தாங்களுந் தக்கபடி முயற்சி செய்வீர்கள் என்று நம்புகின்றேன். சகலமுந் தெரிந்த தங்களுக்கு அடியேன் எடுத்துரைக்கற்பால தொன்றுமில்லை" யென்று கூறியருகில் நிற்றலும் எமது கிருபாநிதியாகிய மணிய சிவனர் மந்தகாசஞ் செய்து மௌனமாயிருந்தனர். சிவனர் செய்த மந்தகாச நிலவில் அவரது மனைவியார் தம்முடைய ஹ்ருத்குமுதந் தம்மை யறியாது மலரவே மிகத் தேற்றமுற்று நிஷ்கவலையாய்ச் சென்றனர்.

இவ்வாறு தமது தலைவியார் சென்றவுடனே சிவனரும் ஸ்நாநஞ்செய்து பூஜைக்கு ஆரம்பித்தார். மறுநாட் பிராதக் காலத்திற் சந்நியாசியாருஞ் சொல்லிய வண்ணம் ஆபிசாரத்திற்கு உபக்கிரமித்தார். சிவனரும் உதயாத்பூர்வம் ஸ்நாந சந்தியாநுஷ்டாநங்களைச் செய்துவிட்டுப் பூசைக்குத் தொடங்கி விட்டார்; பன்னிரண்டு நாழிகை வரைபிராதக்கால பூசையும், அதன் மேல் மாத்தியாந்நிக ஸ்நாநஞ்செய்து அஸ்தமந பரியந்தம் மத்தியாந்ந பூசையும் செய்வார். பிறகு மறுபடியும் சாயங்காலத்தில் ஸ்நானஞ்செய்து, சுவாமிகள் இராத்திரி ஜபஹோமம்செய்து பலகாரம்பண்ணி நித்திரைபோகிற வரையிலும் சாயங்கால பூசை செய்து பூசையைச் சமாப்திபண்ணிப் போசநஞ் செய்யா மல் வாயிற்றெற்றியில் வந்து உட்கார்ந்துகொண்டு பஞ்சாட்சர நியாசஞ் செய்துகொண்டு அருணோதயம் வரை பஞ்சாட்சர ஜபம் பண்ணி திக்விமோகஞ் செய்து ஸ்நாநத்திற்குப் போவார். இந்தப் பிரகாரம் மூன்றுதிநம் ஆகார நித்திரையின்றிச் செய்தனர்.

மூன்றாம்நாளிரவில் "சுவாமிகள் நித்திரை செய்கின்றனரா? பூசையைச் சமாப்தி பண்ணலாமா?" என்று விசாரித்ததில் அவ் விடத்தில் ஏதோ சப்தமுண்டாகிறதென்று வீதியிற் போகிறவர் கள் சொன்னார்கள். அதென்னவென்று அவ்விடத்தில் இருந்த சிஷ்யர் முதலாயினோரெல்லாம் விரைவாக ஓடிப்போய்ப் பார்த் தார்கள். ஆண்டு "உரிநரசிம்ம மணியனைக் கொல்லு", "உரி நரசிம்ம மணியனைக் கொல்லு" என்று சப்தமுண்டாயிற்று. இது காதிற்பட்டார்க ளெல்லாரும் இதென்ன வென்று சிவனாரைக் கேட்டார்கள். அப்போது சிவனார் "சுவாமிகள் ஆந்திர சந்நியா சியாராகையால் தெலுங்குந் தமிழுமாகக் கலந்து புலம்புகின் றனர். மேலும் அவர்தாம் நிருசிம்மோபாசகராதல் பற்றி நிருசிம் மத்தை நம்மாட்டுப் பிரயோகஞ் செய்தனர். அத்தெய்வம் ஈண்டு வருதற்குரிய வாற்றலின்றி யச்சந்நியாசியாரையே திருப்பிக் கொண்டது. இன்னும், மேல் நடக்கப் போகின்ற வேடிக்கை யைப் பாருங்கள்" என்று திருவாய்மலர்ந்தரு ளிய பின்னர்ப் பூசையினைச் சமாப்தி செய்துவிட்டுப் போசநஞ் செய்யாமலே பஞ்சாட்சரத்தை திக்பந்தந சகிதமாகச் செபித்துக்கொண்டிருந் தனர் அருணோதய காலத்திற் சந்நியாசியாரைப் போய்ப் பார்த்து விட்டு வரும்படி தமது மாணாக்கர்கட்குச் சிவனார் உத்தரவு கொடுத் தார். அவ்விடத்திற் போயிவர்கள் பார்த்தபோது சப்தம் அப் போது தான் ஓய்ந்தது; சமீபத்திற் போய்ப் பார்த்தார்கள்; மூக்காலும் வாயாலும் இரத்தத்தைக் கக்கிக் கொண்டுசந்நியாசி யார் மரித்திருத்தலைக்கண்ணுற்று ஓடிப்போந்து சிவனாரிடந் தெரிவித்தார்கள். அது கேட்டுச் சிவனார், "சந்நியாசியார் சரீர மானதனல் விறைத்துப் போமாயின் மடக்குதலரிது; ஆதலிற் சீக்கிரத்திற் சென்று காலை மடக்கி யோகபட்டத்தின் வண்ணங் கட்டிவையுங்கள்" என்று உத்தரவு கொடுத்தனர். அப்போது சிவனாரது மைத்துன ராகிய இராசாங்கம் அண்ணாவையர் சமீபத் தில் வந்து, "இச்சந்நியாசியாருக்கு வெட்டியான் பயலை விட்டுப் பள்ளம் வெட்டிப் புதைக்குமாறு உத்தரவு கொடுக்கவேண்டும்" என்று கேட்டனர். அப்போது சிவனார், "அஃதெப்படி யிருப் பினுஞ் சந்நியாசியாராதலின் விதிவத்தாகக் கநந ஸமஸ்காரஞ் செய்யவேண்டியது கிராமதர்மம். அதனாற் கிராமத்திற்கு அதிக க்ஷேமம் உண்டாம்" என்று கூறியருளிக் கிராமோபாத்தியாய

ரைக் கூப்பிட்டு அவர் மூலமாய்ச் சுவாமிகட்கு மந்திரவத்தாகக் கநநஸம்ஸ் காரம் வேதிகபூசை செய்வித்து அச்சுவாமிகளது பூர்வாச்சிரம சம்பந்தர்கட்குப் பத்திரிகை யெழுதிவிடுமாறு உத்தரவு கொடுத்தனர். அவர்களும் அவ்வாறே செய்தார்கள். இவற்றையெல்லாங் கேள்வியுற்றுச் சமஸ்த சனங்களும் இவரது மகான்மியத்தையுங் கருணையினையும் பற்றிக் கொண்டாடி நிரம்பவு பத்திமான்களாயினார்கள். சந்நியாசியாரை யேவுதல் செய்து இவ்வாறு விண்ணுலகிற்குக் கடிதில் அனுப்புவித்த மகா புருஷர்களும் தாங்கள் சிவனார்மீது வைத்திருந்த துவேஷத்தை யெல்லாம் விட்டுவிட்டு அத்தியந்த பத்திமான்களாகி விட்டார்கள்.

இன்னுஞ் சிலநாட் கழிந்த பிறகு, சிவனார் ஒரு கால் திரிசிர புரத்து மாதர்பூதேசுவரரது உற்சவ தரிசனத்திற்குப் போயிருக்கிற காலத்திற் காவிரியாற்றில் ஸ்நாநஞ்செய்து சிந்தாமணித் துறையின்கட் செபஞ்செய்துகொண் டிருக்கும் போழ்து நியாய ஸ்தல பண்டிதர் கோபால சாஸ்திரியார் என்பவர் ஸ்ரீரங்கத்து வைணவர்களினால் சிவனாரை அவமானஞ் செய்யுமாறு தூண்டப்பட்டுச் சிவனாரை அழைத்துக்கொடுவரும் வண்ணம் தமது சேவகருள் ஒருவனை யனுப்பினார். சேவகனுஞ் சிவனாரிடம்போந்து, "தங்களைக் கூட்டி வருமாறு அடியேற்கு நியாயஸ்தல பண்டிதர் கோபால சாஸ்திரியாரவர்கள் உத்தரவா யிருக்கிறது" என்று கூறி நின்றான். அதைக்கேட்டுப் பட்டை வில்லை சகிதமான சேவகனை நோக்கி, "பண்டிதரவர்கள் நியாயஸ்தலத்தில் யான் வாதியுமல்லேன், பிரதிவாதியுமல்லேன், சாட்சியுமல்லேன். ஆதலின் என்னைக் கூப்பிடக் காரணமுமில்லை" என்று கூறிவிடுத்தனர். சேவகனும் சிவனார் ஈண்டுக் கூறியவற்றை யெல்லாம் பண்டிதரிடந் தெரியப்படுத்தினான். உடனே பண்டிதர் தமது அறியாமைக்காக மனம்புழுங்கிப் புரோகிதரை அனுப்பவே, புரோகிதர் எமது சிவனாரிடம் போந்து, "பண்டிதரவர்கள் தாம் நிரம்ப அபராதஞ்செய்து விட்டதாகவும், தாங்களக் குற்றத்தை மன்னித்தருள வேண்டுவதாகவும், தங்கள் இருப்பிடத்திற்கு அவர்தாமே வருவதாகவும் சொன்னார்கள்" என்று கூறினார். அம்மொழி செவியிற் படலும் எஞ்சிவனார், "அவரது இருக்கையிற்கு யானே வருகின்றேன்" என்று சொல்லிக்கொண்டே புறப்பட்டுவிட்டார். இச்செய்தியினை யுணர்ந்த பண்டிதர் வெளி

யிற்போந்து பலவித உபசாரங்களுஞ் செய்து கிருகத்திற்குள் அழைத்துக்கொண்டு போய்ப் பீடங்கொடுத்துத் தாமும் வணங்கி யிருந்தனர். எமது மணிய சிவனரும் பண்டிதர் வேண்டு கோட் கிணங்கிப் பீடத்தின்கண் எழுந்தருளி யிருக்கையிற் பண்டிதரது வீட்டில் வைணவர்கள் சங்கேதமாகவந்து கூடினர்கள். அச்சங் கேதத்தினை யுணர்ந்த சிவனர் வைணவக்குழாத்துள் ஒருவனை நோக்கி, "நின்மாட்டுள்ள புத்தகம் யாது" என்று பிரசினம் பண்ணினர். அதற்கவன், "இது போஜசம்பு" என்ருன். "ஆயின் அதிலொரு சுலோகஞ் சொல்லுதி" யென்று சிவனர் வினயினர். உடனே யவன், "நீங்களே கேளுங்கள்; நீங்கள் எதைக் கேட்டபோதிலுஞ் சொல்லும் வல்லமையுடையேன்" என்ருன். அப்போது சிவனர்,

वाणीविलासमपरत्रकृतोपलंभ
मंभोजभूरसहमानइवाविरासीत् ।
आभातियत्कृतिरनेकविधप्रपंच
व्याजेंद्रजालविधिसाधकपिंछिकेव ॥

"வாணீவிலாஸமபரத்ரக்ருதோபலம்ப
மம்போஜபூரஸஹமாநஇவாவிராஸீத்।
ஆபாதியத்க்ருதிரநேகவிதப்ரபஞ்ச
வ்யாஜேந்த்ரஜாலவிதிஸாதகபிஞ்சிகேவ"

என்ற சுலோகத்திற்குப் பொருளுரைத்தி" என்றனர். உடனே யவனும் பொருள்கூறினன். சிவனரும் அப்பொருளினைக்கேட்டு, "இங்ஙனங் கூறிய பொருளில் தோஷமுளதே. இது குரவர் கூறிய பொருடானு?" என்று வினயினர். அச்சமயத்தில் வீரராகவ தாத்தாசாரியாரெனப் பெயர்படைத்த ஒரு வித்துவான் கோபங் கொண்டு, "இந்த அர்த்தத்திற்கு என்னதோஷம்?" என்று சொல்லி யெதிர்த்துக்கொண்டார். அவ்வாறு எதிர்த்துச் சினந்து பேசியபோது சிவனர், "இச்சுலோகத்தின் உத்தரார்த்தத்தின் கட் பிரமதேவருடைய கிருத்தியமானது இந்திரஜால வித்துவானுடைய பிஞ்சிகைபோலும் என்று கூறப்பட்டுளது; அவ்விந்திரஜால வித்துவானது பிஞ்சிகையினலுண்டாம் காட்சியானது வித்தையாடுகிற காலத்திற் சத்தியமாகவும் பரேக்' என்று முடிக்குங்காலத்தில் அந்தர்த்தானமாகவும் போய்விடுகின்றது.

அங்ஙனம் போயபின், பிஞ்சிகைமாத்திரம் சத்தியமாயுளது. அதையொப்பவே பிரமதேவனுடைய கிருத்தியத்தினல் உண்டாகும் சகமானது ரபிளயகாலத்தில் அந்தர்த்தானமாகப் போய் விடுகிறது" என்று நம்மவன் கூறிய பொருளில் பிரமதேவருடைய கிருத்தியத்தை யிந்திரசால வித்வானது பிஞ்சிகையிற் கொப்பிட்டிருத்தலிற் பிஞ்சிகைமட்டும் நிசமாயிருத்தல் போலக் கிருத்தியமும் சத்தியமாயிருத்தல் வேண்டுமே யன்றே? வித்தையாடுகிறவனது பிஞ்சிகையானது குருவினற் கொடுக்கப்பட்டுப் பரம்பரையாக வருவதுபோலப் பிரமதேவருடைய கிருத்தியமுமிருக்க வேண்டுமன்றே? இவ்வினக்களை விடுத்தீர்" என்று கூறியருளலும், இவ்வினக்கட்கு வைணவர் குழாத்துள் ஒருவருக்கும் பிரதியுத்தரஞ் சொல்லத் தோன்றவில்லை யாதலின் அதுபற்றி யவர்கள் எல்லோரும் மௌனமாயிருந்துவிட்டார்கள். அப்போது பண்டிதர் வைணவர்களைப்பர்த்து, "ஓ! வைணவிர்காள்! நீவிர் இச்சிவனரை அவமானஞ்செய்து விடுகிறேமென்று வீறு கூறினீர்களே! போஜசம்பு சுலோகத்தின்கண் இரண்டொருவினவிற்கு உத்தர முரைக்கவல்லமை யில்லாத நீவிரோ சைவவைணவ கட்சியெடுத்து வாதஞ்செய்யப் போகிறீர்கள்! ஏயே! நுமது புலமைத்திறன் என்னே?" என்று எள்ளி நகையாடினர். அதற்கவர்கள், "யாங்கள் யோசித்துச் சொல்லுகின்றேம்" என்றுரைத்தார்கள் உடனே பண்டிதரும், "நீவிர் இன்னுமொருவாரத் திற்குட் சொல்லுவீர்" என்றுகூறி அவர்களை அனுப்பிவிட்டனர். வைணவர் வீட்டைவிட்டு வெளியேறிய பிறகு இச்சுலோகத்தினது பாவத்தைக் கூறியருளவேண்டுமென்று பண்டிதர் சிவனரைப் பிரார்த்தித்தனர். அப்போது சிவனர் மகாவாக்கிய தீபிகாப்பிரகரணத்திற் பதினெட்டாவது சுலோகத்தின் கண்,

" यज्ञात्तेहिदेहिनोस्रुजदमून्शब्दा
न्छ्रुतेश्चस्मृतेर्नित्यत्वंचतःतश्रुतेः "

" யஜ்ஞாத்தே ஹ்ருதி தேஹினோ ஸ்ருஜதமூன் சப்தா
ன்ச்ருதேச்ச ஸ்ம்ருதேர் நித்யத்வஞ்ச தத: தச்ச்ருதே: "

என்ற சுலோக வியாக்கியானத்தைச் சவிஸ்தாராமாய்ச்சொல்லி, "அநாதியாயுள்ள வேதத்தினைப் பிரமதேவர் பரமசிவனிடமிருந்து

பெற்று அதன் அர்த்தத்தைத் தமது மனத்தின்கண் ஸ்மரித்து வாக்கினு லுச்சரித்தலிற் சகமுண்டாகின்றது." அதற்குப் பிரமாணம்

" सभूरितिव्याहरत्सभूमिमसृजत "

" ஸபூரிதிவ்யாஹரத்ஸபூமிமஸ்ருஜத "

என்பதாம். சிருட்டிக்க வேண்டுமென்ற எண்ணமின்றிப் பிரமதேவர் வேதத்தை யுச்சரிப்பின் அது பாராயணமாமேயன்றிச் சிருட்டிசெய்யாது. சிருட்டிக்கவேண்டுமென்ற எண்ணத்தோடு மனமொன்றிப் பிரமதேவர் வேதத்தை யுச்சரிப்பின் அது சிருட்டிப்பதற்கு ஏதுவாகும். இதுதான் பிரமதேவருடைய கிருத்தியம். இவ்வுவமேயத்தோடு காளிதாச மகாகவி கூறிய வுபமானத்தைப் பொருத்திக் காட்டுதல் கேட்டிர்:—இந்திரஜால வித்தைக்காரன் சாமாநியமாய்த் தனது பிஞ்சிகையை யுதறுகிற காலத்திற் கருதியகாட்சி யுண்டாகமாட்டாது. அத்தகை காட்சி காட்டவேண்டுமென்று மனத்தின்கட்கருதி வித்தையாடும்போது பிஞ்சிகையை யுதறுகையில், அஃது உண்டாகும்" என்று திருவாய் மலர்ந்தருளிய பொருளினைப் பண்டிதர் கேட்டு அளப்பரியவானந்த வாரி மூழ்கி யெஞ்சிவனார்க்குச் சம்மானஞ் செய்யுமாறு யத்தனித்தனர். அஃதுணர்ந்த சிவனார், "யான் பிரதிக்கிரகம் வாங்குகிறதில்லை" யென்று மறுத்துவிட்டு, நமது மதுரை யம்பதிக்குப் பிரயாணமாகி வந்துவிட்டனர்.

அங்ஙனஞ் சிவனார் மதுராபுரிக்குப் போந்தபோது ஆவணி மூலோற்சவகாலமா யிருந்தது. அவ்வாவணி மூலோற்சவத்தில் ம்ருத்பாரலீலை முடிந்த பின்றைச் சிவபத்தர்களோடு கூட வெஞ்சிவனாரும் போஜநஞ் செய்வதைக் கண்ணுற்ற சிலர், "இலீலை முடிகிற பரியந்த முபவாசமிருக்க வேண்டிய தென்னை? அங்ஙனமிருத்தல் வேண்டுமென்பதற்கு விதியுளதோ?" என்று வினவலும் எமது அற்புத வள்ளலாகிய சிவனார், "அநாதிகாலந்தொட்டு அவ்விலீலையினைச் செய்து வருகின்ற ஆதிசைவர்கள் உபவாசமாயிருந்து செய்கின்றார்களென்பதை நீவிரறிதிரன்றே! அங்ஙனமிருப்பத் தரிசனஞ்செய்பவர்களாகிய யாமும் அவ்வாறே யுபவாசமிருந்து தரிசநஞ்செய்தல் வேண்டுமென்பது தவறாகக் கடன்பாடன்றோ? பரமசிவனது லீலா சரித்திரங்களைக் கதையாகப்

பாஷாந்தரங்களிற் சொல்லுவதைக் காட்டிலும், புராணத்தின் கட் பூசித்து நமஸ்காரமாகப் புராணத்தின்கட் பூசித்து நமஸ்கார புரஸ்ஸரமாகப் புராண வக்தாவினுடைய முகத்தாற்கேட்பது விசேட மென்றும் ஆசாரியா பிஷேகமானவர்களால் அலங்கிருத ராயுள்ள சிவபெருமான் முன்பிருந்து கதையினைக் கழறி அவ்வி லீலையினையும் அபிநயஞ்செய்து தீபாராதந தரிசநஞ் செய்வது அதினும் விசேஷம் என்றும் சைவாகமங்கள் ஓலமிடுவதை யறிந்திலீரோ? இவற்றையெல்லாம் வேடிக்கைகளாக நினைத்த லொழிமின்! பக்தி சிரத்தையுடன் றரிசநஞ் செய்வீர்கள்" என்று கூறியருளினர். இவ்வுபதேசங் கேட்ட வெகு பேர்கள் சிவபத்தர் களாயினர்கள்.

இன்னொருகால் அக்கூடலம்பதியினுக் கருகிலோடாநின்ற வைகைநதி தீரத்தில் ஸ்நாந கட்டத்தில் விபூதிதாரணஞ்செய்து கோடலைப்பற்றி விவாதம் வந்தபோது, சிவனர் பஸ்மதாரணம் சிரௌத மென்று கூறியருளினர். அப்போதந்தக் கட்டத்தி லுள்ள வைதீகர்கள், " வஸ்திரம் கடீசூத்திரம் உபவீதம் ஆகிய இவற்றைப்போல பஸ்மதாரணமும் ஸ்மார்த்தந்தான்" என்றார் கள். அதற்குச் சிவனர்,

भूत्यैन प्रमदितव्यम्
" ഭൂത്യൈ ന പ്രമദിതവ്യം "

என்று சுருதியிற் சொல்லப்பட் டிருக்கின்றது. இதற்குப் பாஷிய காரர்

भूतिः = विभूतिः
" ഭൂതിഃ = വിഭൂതിഃ "

என்று பொருள் கூறுகின்றனர் என்று சொல்வி, அதுவே

मंगलयुक्तंकर्म
" മംഗളയുക്തംകർമ്മ "

என்றுரைக்கப்படுகின்றது என்றும் கூறி, பஸ்மத்தைச் சர்வ கர்மாங்கமாயுஞ் சார்வகாலிகமாயுஞ் சர்வகர்மார்கமாயுஞ் சொல்லு கிற தகர வித்தியாப் பிரகரணத்தி னெட்டாவது சுலோகமான

भूत्यंकोच्योप्रमादान्मुनिहरिमुखै
रत्रचान्यत्रशास्त्रैः कर्मायंभूतिदंमाङ्ग
ळिकमखिलकर्मेष्टदावश्यकत्वात्
आद्यत्वात्सूत्रपूर्वैः श्रुतिमुख
विहितस्यांगभूतस्सदार्च्य
श्रुत्यास्मृत्यासुतथ्यस्मृतिनिगमयु
गाद्धेतुभिर्वैदिकोसौ ॥

"𑌭𑍂𑌤𑍍𑌯𑌂𑌕𑍋𑌚𑍍𑌯𑍋𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌾𑌨𑍍𑌮𑍁𑌨𑌿𑌹𑌰𑌿𑌮𑍁𑌖𑍈
𑌰𑌤𑍍𑌰𑌚𑌾𑌨𑍍𑌯𑌤𑍍𑌰𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍈𑌃𑌕𑌰𑍍𑌮𑌾𑌯𑌂𑌭𑍂𑌤𑌿𑌦𑌂𑌮𑌾𑌙𑍍𑌗
𑌲𑌿𑌕𑌮𑌖𑌿𑌲𑌕𑌰𑍍𑌮𑍇𑌷𑍍𑌟𑌦𑌾𑌵𑌶𑍍𑌯𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 ।
𑌆𑌦𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌸𑍂𑌤𑍍𑌰𑌪𑍂𑌰𑍍𑌵𑍈𑌃𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌮𑍁𑌖𑌵
𑌵𑌿𑌹𑌿𑌤𑌸𑍍𑌯𑌾𑌂𑌗𑌭𑍂𑌤𑌸𑍍𑌸𑌦𑌾𑌚𑌰𑍍𑌯
𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌯𑌾𑌸𑍍𑌮𑍃𑌤𑍍𑌯𑌾𑌸𑍁𑌤𑌥𑍍𑌯𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌨𑌿𑌗𑌮𑌯𑍁
𑌗𑌾𑌦𑍍𑌧𑍇𑌤𑍁𑌭𑌿𑌰𑍍𑌵𑍈𑌦𑌿𑌕𑍋𑌸𑍌 ॥"

என்றதை வியாக்கியானத்துடன் விஸ்தாரமாய்ச் சொல்லுகிற சிவனாரது அர்த்தப் பிரசங்கத்தைச் செவியிலேற்றுக் கிருதார்த்தனாகுங் கருத்தினனாய்ச் சூரியபகவானும் பிராணரூப மெடுத்துக் கொண்டு, தன்றொழிலாகிய வெயிலெறிவதை விட்டுச் சபை நடுவண் திரோகிதனாய் வந்திருந்ததுபோலும் ஆகாயத்தின்கண் வெயிலின்றி யெங்கும் மந்தாரமா யிருந்ததன்மை! அன்று சோமவாரமானதனாலும், எஞ்சிவனார்க்குப் பூசா நிமித்தம் எழுந்திருக்க வேண்டுமென்ற அவசரமில்லாததனாலும், அக்காலத்து வித்துவான்களாயிருந்த சங்கர சாஸ்திரிகள், இராமசுவாமி சாஸ்திரிகள், அண்ணா சாஸ்திரிகள், சூரியநாராயண சாஸ்திரிகள் முதலியோரெல்லாம் நியாயவக்தாக்களா யிருந்தபோதிலும் சிவனாரது பிரசங்கத்தின் இனிமையினால் வசீகரிக்கப் பட்டவர்களாய்த் தாங்கள் அன்றுதினம் நியாய ஸ்தலத்திற்கு வரமுடியாதென்று எழுதிக்கொண்டார்கள். வைதீகர்களுந் தத்தமது காரியங்களை மறந்துவிட்டு இப்பஸ்ம மகிமையினைக் கேட்டுக்கொண்டே யிருந்துவிட்டார்கள். வெகுநேரமாய் விட்டது. இவ்விதமாகச் சிவனார் தமது பிரசங்க வன்மையாற் பலர் மனங்களையுங் கவர்ந்து நிற்கையிற் சிலர்

शिखांसूत्रंच पुण्ड्रंच
समयाचारमेवच ।
पूर्वैराचरितंकुर्या
दन्यथापतितोभवेत् ॥

"ஶிகா²ம்ஸூத்ரஞ்ச புண்ட்³ரஞ்ச
ஸமயாசாரமேவச ।
பூர்வைராசரிதங்குர்யா
த³ந்யதா²பதிதோப⁴வேத் ॥"

என்று கூறப்பட்டிருப்ப, பஸ்மதாரணத்தைச் சார்வத்ரிகமாக எங்ஙனஞ் சொல்லுதல் கூடும்?" என்று வினவினார்கள். அப்போது சிவனார், "தப்தமுத்திராதாரணஞ் செய்துகொண்டு சித்திரோர்த்துவ புண்டர தாரிகளாகிய வைணவர்கட்கு மரண பரியந்தம் அவ்வப்புண்டரதாரணந்தான். அவ்வமிசஸ்தர்கட்கும் அவ்வாறேயாம். கோபீ சந்தனதாரிகளுக்கு அங்ஙனமின்றாம். ஏனெனில்:—வாசு தேவோபநிஷத்தில்

ममांगेआलिप्तंविष्णुचंदनं
गोपीभिःप्रक्षाळनात्
गोपीचंदनमाख्यातंमद्भक्तैः
ब्रह्मादिभिर्घोषितम् ॥

"மமாங்கே³ஆலிப்தம்விஷ்ணுசந்த³நம்
கோ³பீபி⁴ப்ரக்ஷாளநாத் ।
கோ³பீசந்த³நமாக்²யாதம்மத்³ப⁴க்தை:
ப்³ரஹ்மாதி³பி⁴ர்கோ⁴ஷிதம் ॥

என்று சொல்லி யிருக்கின்றது. அவ்விடத்தில் 'விஷ்ணு சந்தநம்' என்னுந் தொடர்க்கு விஷ்ணுவானவர் பரமசிவனுக்குச் சிவபூசையிற் சந்தநத்தைச் சமர்ப்பணஞ்செய்து தன்னுடைய தேகத்தில் ஆலேபநஞ் செய்துகொண்டனர்; அதுபற்றி விஷ்ணுவினுடைய நிர்மாலியமாகியவச் சந்தநம் அவ்விஷ்ணுவினது பத்தர்களினாலே தாரணஞ்செய்து கொள்ளப்பட்டதென்று கூறியுளது. அதனால் விஷ்ணுவினுடைய நெற்றியிற் பூசாங்கமாகத் திரிபுண்டரதாரணந்தானுள தென்க.

विनाभस्मत्रिपुण्ड्रेण
विनारुद्राक्षमालया
विनामाल्रूपत्रेण
निष्फलंशिवपूजनम्.

"விநாஹஸ்மத்ரிபுண்ட்ரேண
விநாருத்ராக்ஷமாலயா ।
விநாபில்வபத்ரேண
நிஷ்பலம்ஶிவபூஜநம் ॥"

என்றும்

यस्तूर्ध्वं पुण्ड्रादुपरित्रिपुण्ड्रधृ
गुद्धलितांगहृदयस्सभवेद्भवानि ।
वर्णीवनागृहियतीममपूजकश्चेन्
मद्रुद्रजाप्यपरमोनरकंप्रयाति ॥

"யஸ்தூர்த்வபுண்ட்ராதுபரி த்ரிபுண்ட்ரத்ருக்
ஶுத்தலிதாங்கஹ்ருதயஸ்ஸபவேத்பவாநி ।
வர்ணீவநீக்ருஹியதீமமபூஜகஶ்சேந்
மத்ருத்ரஜாப்யபரமோநரகம்ப்ரயாதி ॥"

என்றும் நிஷேத மிருப்பதனாலே கோபீ சந்தனதாரணம் கிரியாங்கமாகமாட்டாது. ஆந்நிகத்தில்

यज्वातुधारयेन्नित्यं
भस्मनैवत्रिपुण्ड्रकम् ।

"யஜ்வாதுதாரயேந்நித்யம்
பஸ்மநைவத்ரிபுண்ட்ரகம் ।"

என்று கோபீ சந்தனதாரியாயுள்ளவன் யஜ்வாவாவனேற்கோபீ சந்தனதாரணத்தைத் தொலைத்து விட்டுத் திரிபுண்டரதாரணமே செய்தல் வேண்டுமென்று கூறியிருப்பதனாலே பூர்வீகர்களாலாசரிக்கப்பட்ட புண்டரதாரணத்தை விட்டுவிடக் கூடாதென்ற விஷயம் தாந்திரிக வைஷ்ணவ பக்ஷமேயாம். வைதீகர்களாகிய கர்ம வைஷ்ணவாத்வைத யோக சாங்கியமதஸ்தர்கட்கும் சாம்பவாதிகட்கும் திரிபுண்டரதாரணமே முக்கியமாதல்பற்றி யொற்று

மையுளதாயினும், மந்திரத்தில் வேற்றுமையுளதாமென்க. காலாக்நி ருத்திரோபநிஷத் பாராயணஞ் செய்துகொண்டு செய்கிற திரிபுண்டரதாரணம் உபநிஷத்பாராயணபலமாக ஆகுமே தவிர சமந்திரகக் கிரியையாக மாட்டாது. எவ்வெக் கிரியைக்கு எவ்வெம்மந்திரங்கள் சொல்லப் பட்டிருக்கின்றனவோ அவ்வம் மந்திரங்களின் வண்ணமே செய்தல் வேண்டும்.

यस्त्वेतदधीतेसोप्येवमेव भवति

யஸ்த்வேதததீதே ஸோப்யேவமேவ பவதி

யென்ற விஷயம் வெகுகால பாராயணத்தினுற் கிரியாவானுய்விடுவானென்னும் கருத்தினை யுட்கொண்டேயாம். பாராயணம் அங்கம். கிரியையே முக்கியமாம். பிரமசரியத்தில் வேதாத்தியயநஞ் செய்து அப்பலத்தினுற் கிருகஸ்தாசிரமத்தில் யக்கியஞ்செய்கிறவனுக்கு 'யஜ்வா' என்ற மகிமை யேற்படுவது போலச் சமந்திரகமாக ஆக்கிநேயஸ்நாநஞ் செய்கிறவர்களுக்கே மகத்துவ மேற்படுமென்க.

यदिभवतिमहत्वंभस्मरुद्रक्षभाजां
किमितिनमृतिरस्मद्द्रोहिणस्स्यादकाण्डे ॥

"யதி பவதி மஹத்வம் பஸ்மருத்ராக்ஷபாஜாம்
கிமிதி ந ம்ருதிரஸ்மத்த்ரோஹிணஸ்ஸ்யாதகாண்டே"

என்று ஸ்ரீ அப்பைய தீக்ஷிதரவர்களாலும் பிரமாணஞ்செய்யப் பட் டிருத்தல் காண்க" என்று முகமலர்ந்தருளிய பிரசங்கத்தினைக் கேட்டுக்கொண்டிருந்த யாவரும் எமது மணிய சிவனுரைப் பரம சிவாம்சாவதாரமென்று நினைத்து உவகைக்கடல் குளித்தார்கள்.

பிறகு அத்திருவாலவாய்க் கண்ணே உமாமகேசுவர சாஸ்திரிகள் என்ற ஒரு சாம்பவர் தமது கிருகத்திற்குச் சிவனுரை யழைத்துக் கொண்டுபோய்த் தாம் நாடோறும் பூஜை செய்கின்ற சிவலிங்கத்தினைக் காட்டினர். அப்போது சிவனுர், "இவ்விலிங்கம் உமக்கு எங்ஙனங் கிடைத்தது?" என்று கேட்ப, "உத்திராதிமடத்தினுக் கதிகாரியாயிருந்த வொருமத்துவ சந்நியாசியார் சாக்கியநாதரைப் போன்று அந்தரங்க சிவபக்தியினுற் சுவர்ண சம்புடத்தின் கண் இவ்விலிங்கத்தை மறைவாக வைத்துப் பூசித்து வந்து தமக்கு அந்திய காலத்தி லெனக்குச் சிநேகிதராயுள்ள ஒரு ஆசா

ரிப் பிராமணனிடத்திற்றந்து சிவராத்திரி தினத்திற் சிரத்தையுடன் நித்திரை யின்றிப் பூசிக்கிற ஸ்மார்த்தர்களிடத்திற் கொடுத்து விடுமாறுகூறிக் காலஞ்சென்றனர். அவ்வாசாரிப் பிராமணனெனக்குக் கொடுத்தான். யானும் அவ்வாறே சிவராத்திரியிற் சிரத்தையாகப் பூசித்து வருகின்றேன். அவ்வாசாரிப் பார்ப்பானும் சிவபக்தி யுடையனாதலின், சிவராத்திரியில் அடியேன் அவ்விலிங்கத்தைப் பூசிக்கும்போது உடனிருந்து நித்திரையின்றி வீணாகானஞ்செய்து வருகின்றனர்" என்று சாஸ்திரிகள் சொற்றனர். ஈங்கே கூறிய வெல்லாஞ் செவியிற்பட்ட சிவனார், "இவ்விலிங்கத்தினைப் பூசிக்கின்றவர்கள் விதிவத்தாக ஆக்கிநேய ஸ்நாநஞ் செய்துகொண்டு ஏகலிங்கார்ச்சனஞ் செய்யவேண்டும்" என்று கூறினர். இதுகேட்ட உமாமகேசுவர சாஸ்திரிகளும் வேறு சில சிவபக்தர்களும், "ஆக்கிநேயஸ்நாந விதியினை அடியேங்கள் உய்யும் பொருட்டு உபதேசித்தருளல் வேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள். அங்ஙனம் அவர்கள் பிரார்த்தித்தற்கிணங்கி, எம் சிவனார், "சத்தியோஜாதாதி பஞ்சப்பிரம மந்திரத்தாற் பஸ்மத்தைக் கிரகித்துக் காலாக்கினி ருத்திரோபநிஷத்திற் சொல்லியிருக்கின்ற 'அக்கினீ' ரித்தியாதி மந்திரங்கள் ஏழும், அதர்வண மந்திரங்கள் எட்டும் ஆகப் பதினைந்து மந்திரங்களால் அப்பஸ்மத்தினை யபிமந்திரித்து,

भूंतं भावनं नमामि
"𑌭𑍂𑌤𑌂 𑌭𑌾𑌵𑌨𑌂 𑌨𑌮𑌾𑌮𑌿"

என்றுரைத்துச் சிரத்தை வணக்கித் திரியம்பக மந்திரத்தாற் சர்வாங்கோத்தூளநஞ் செய்து கொண்டு,

भूतादित्येभ्योनमः
"𑌭𑍂𑌤𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑍇𑌭𑍍𑌯𑍋 𑌨𑌮𑌃"

என்று சொல்லிக் கிஞ்சித்தைத் தேவதைகட்குச் சமர்ப்பித்துத் திரியம்பக மந்திரத்தாற் சலத்தினைச் சேர்த்து,

मानस्तोके
"𑌮𑌾𑌨𑌸𑍍𑌤𑍋𑌕𑍇"

என்ற மந்திரத்தாற் குழைத்துத்,

शिखांसूत्रंच पुण्ड्रंच
समयाचारमेवच ।
पूर्वैराचरितंकुर्या
दन्यथापतितोभवेत् ॥

“𑌶𑌿𑌖𑌾𑌂𑌸𑍂𑌤𑍍𑌰𑌂𑌚 𑌪𑍁𑌣𑍍𑌡𑍍𑌰𑌂𑌚
𑌸𑌮𑌯𑌾𑌚𑌾𑌰𑌮𑍇𑌵𑌚
𑌪𑍂𑌰𑍍𑌵𑍈𑌰𑌾𑌚𑌰𑌿𑌤𑌂𑌕𑍁𑌰𑍍𑌯𑌾
𑌦𑌨𑍍𑌯𑌥𑌾𑌪𑌤𑌿𑌤𑍋𑌭𑌵𑍇𑌤𑍍 ॥”

என்று கூறப்பட்டிருப்ப, பஸ்மதாரணத்தைச் சார்வத்ரிகமாக எங்ஙனஞ் சொல்லுதல் கூடும்?” என்று வினவினார்கள். அப்போது சிவனார், “தப்தமுத்திராதாரணஞ் செய்துகொண்டு சித்திரோர்த்துவ புண்டர தாரிகளாகிய வைணவர்கட்கு மரண பரியந்தம் அவ்வப்புண்டரதாரணந்தான். அவ்வமிசஸ்தர்கட்கும் அவ்வாறேயாம். கோபீ சந்தன தாரிகளுக்கு அங்ஙனமின்றாம். ஏனெனில் :--வாசு தேவோபநிஷத்தில்

ममांगेआलिप्तंविष्णुचंदनं
गोपीभिःप्रक्षाळनात्
गोपीचंदनमाख्यातंमद्भक्तैः
ब्रह्मादिभिर्धापितम् ॥

“𑌮𑌮𑌾𑌂𑌗𑍇𑌆𑌲𑌿𑌪𑍍𑌤𑌂𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌚𑌂𑌦𑌨𑌂
𑌗𑍋𑌪𑍀𑌭𑌿𑌃𑌪𑍍𑌰𑌕𑍍𑌷𑌾𑌳𑌨𑌾𑌤𑍍 ।
𑌗𑍋𑌪𑍀𑌚𑌂𑌦𑌨𑌮𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌂𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑍈𑌃
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌦𑌿𑌭𑌿𑌰𑍍𑌧𑌾𑌪𑌿𑌤𑌮𑍍 ॥

என்று சொல்லி யிருக்கின்றது. அவ்விடத்தில் ‘விஷ்ணு சந்தநம்’ என்னுந் தொடர்க்கு விஷ்ணுவானவர் பரமசிவனுக்குச் சிவபூசையிற் சந்தநத்தைச் சமர்ப்பணஞ்செய்து தன்னுடைய தேகத்தில் ஆலேபநஞ் செய்துகொண்டனர்; அதுபற்றி விஷ்ணுவினுடைய நிர்மாலியமாகியவச் சந்தநம் அவ்விஷ்ணுவினது பத்தர்களினாலே தாரணஞ்செய்து கொள்ளப்பட்டதென்று கூறியுளது. ஆதலால் விஷ்ணுவினுடைய நெற்றியிற் பூசாங்கமாகத் திரிபுண்டரதாரணந்தானுள தென்க.

विनाभस्मत्रिपुण्ड्रेण
विनारुद्राक्षमालया
विनामाल्लूरपत्रेण
निष्फलंशिवपूजनम् ॥

"விநாபஸ்மத்ரிபுண்ட்ரேண
விநாருத்ராக்ஷமாலயா ।
விநாமால்லூரபத்ரேண
நிஷ்பலம்ஶிவபூஜநம் ॥"

என்றும்

यस्तूर्ध्वं पुण्ड्रादुपरित्रिपुण्ड्र धृ
गुद्धलितांगहृदयस्सभवेद्भवानि ।
वर्णीवनागृहियतीममपूजकश्चेन्
मद्रुद्रजाप्यपरमोनरकंप्रयाति ॥

"யஸ்தூர்த்வபுண்ட்ராதுபரித்ரிபுண்ட்ரத்ரு
குத்துளிதாங்கஹ்ருதயஸ்ஸபவேத்பவாநி ।
வர்ணீவநாக்ருஹியதீமமபூஜகஶ்சேந்
மத்ருத்ரஜாப்யபரமோநரகம்ப்ரயாதி ॥"

என்றும் நிஷேத மிருப்பதனாலே கோபீ சந்தநதாரணம் கிரியாங்கமாகமாட்டாது. ஆந்நிகத்தில்

यज्वातुधारयेन्नित्यं
भस्मनैवत्रिपुण्ड्रकम् ।

"யஜ்வாதுதாரயேந்நித்யம்
பஸ்மநைவத்ரிபுண்ட்ரகம் ।"

என்று கோபீ சந்தநதாரியாயுள்ளவன் யஜ்வாவாவனேற்கோபீ சந்தநதாரணத்தைத் தொலைத்து விட்டுத் திரிபுண்டரதாரணமே செய்தல் வேண்டுமென்று கூறியிருப்பதனாலே பூர்வீகர்களாலாசரிக்கப்பட்ட புண்டரதாரணத்தை விட்டுவிடக் கூடாதென்ற விஷயம் தாந்திரிக வைஷ்ணவ பக்ஷமேயாம். வைதீகர்களாகிய கர்ம வைஷ்ணவாத்வைத யோக சாங்கியமதஸ்தர்கட்கும் சாம்பவாதிகட்கும் திரிபுண்டரதாரணமே முக்கியமாதல்பற்றி யொற்று

त्रियायुषं
"த்ரியாயுஷம்"

இத்யாதி மந்திரங்களாற் றிரிபுண்டரதாரணஞ்செய்து கோடல் வேண்டும். இது சாமாநியாங்கபூஜக விஷயமாம். அங்கிபூஜகர் கட்கோவெனில் :—

मानस्तोके
"மாநஸ்தோகே"

என்ற மந்திரத்தால் இலிங்காகாரஞ் செய்து, சப்ரும்மாங்கத்திநாற் சதாசிவத்தைத் தியாநிக்கவேண்டும். இது சாம்பவர்கட்கேயாம். இனிப் பாசுபதர்கட்குப் பரசிவ சப்ரும்மாங்கமும், சதாசிவ சப்ரும்மாங்கமும் செய்யவேண்டும். மகாசைவர்கட்கோ வென்றால், பூர்ணசிவசப்ரும்மாங்கமும் மூர்த்திகளது மந்திரமும், பரசிவ சதாசிவசக்திகளது சப்ரும்மாங்கமும், அவகாசமில்லாத பட்சத் திற் பிரதாநசப்ரும்மாங்கமும், முற்கூறிய பதினைந்து மந்திரமும் சொல்லித் தியாநித்துப் பூர்ணசிவ திக்பந்தந மந்திரத்தாற்றிக் பந்தநஞ்செய்து, மறுபடி திக்பந்தநமென்ற சப்தமின்றி மேற் படி மந்திரத்தாலாவது அவரவர்களுடைய மந்திரத்தாலாவது அவகுண்டநஞ்செய்து கொண்டு,

ईशानादि
"ஈசாநாதி"

மந்திரங்களினால் அந்தந்த ஸ்தாநங்களில் அவகுண்டநஞ்செய்து பூர்ணசிவ பரசிவ அங்கங்களாலும் அவகுண்டநஞ்செய்து, பிறகு அஷ்டாத்திரிம் சத்கலாநியாசத்தினாலும் அவகுண்டநஞ் செய்து, மறுபடி பதினைந்து மந்திரங்களினாலும் பிரத்தியேகம் பிரத்தி யேகமாய் அவகுண்டநஞ் செய்தல் வேண்டும். இதுதான் ஆக்கி நேயஸ்நாந விதியாம். இதிற் கணபதி சுப்பிரமணிய மந்திரங் கட்குக் கிரகணமில்லை. பிறகு சைவாசமநமும், சாக்தாசமநமும், சாக்தமில்லாத பட்சத்திற் சைவாசமநமே துவிராவிர்த்தியும் செய்தல் வேண்டும். இனித் திரிபுண்டரதாரணப் பிரகாரத்தினைக் கூறுகின்றேன் கேண்மின் :—

त्रियायुष
"த்ரியாயுஷம்"

என்ற மந்திரத்தைச் சொல்லி

ॐ शिवायनमः

" ഓംശിവായ നമഃ "

என்று அவரவர்களுடைய மூலமந்திரங்களாற் சிரத்திற் றிரிபுண்டரதாரணமும் பின் கூறப்போகின்ற தந்திரங்க ளெல்லாவற்றிற்கும் ஒவ்வொன் அன்றிங்மத்திலும் அவரவர்கள் தத்தமது மூலமந்திரத்தைச் சொல்லி, அந்தந்த ஸ்தாநங்களிற் றிரிபுண்டரதாரணஞ் செய்தல் வேண்டும். அதாவது :—

त्रयबकं जामहे

" ത്ര്യംബകം യജാമഹേ "

முதல்

शक्तयेनमः

" ശക്തയേ നമഃ "

வரை இல்லாடத்திலும்,

सादाख्यायनमः

" സാദാഖ്യായ നമഃ "

என்று கண்டத்திலும்,

ईशायनमः

" ഈശായ നമഃ "

என்று வலதுபாகுவிலும்,

रुद्रायनमः

" രുദ്രായ നമഃ "

என்று இடதுபாகுவிலும்,

वामायैनमः

" വാമായൈ നമഃ "

என்று வலது கூர்ப்புரத்திலும்,

ज्येष्टायैनमः

" ജ്യേഷ്ഠായൈ നമഃ "

என்று இடது கூர்ப்புரத்திலும்,

रौद्र्येनश:

" 𑌰𑍌𑌦𑍍𑌰𑍍𑌯𑍈 𑌨𑌮𑌃 "

என்று வலது ஹஸ்தமூல்த்திலும்,

काळ्येनमः

" 𑌕𑌾𑌲𑍍𑌯𑍈 𑌨𑌮𑌃 "

என்று இடது ஹஸ்தமூலத்திலும்,

कलविकरिण्येनम:

" 𑌕𑌲𑌵𑌿𑌕𑌰𑌿𑌣𑍍𑌯𑍈 𑌨𑌮𑌃 "

என்று ஹ்ருதயத்திலும்,

वलविकरिण्मेमम:

" 𑌬𑌲𑌵𑌿𑌕𑌰𑌿𑌣𑍍𑌯𑍈 𑌨𑌮𑌃 "

என்று நாபியிலும்,

वलप्रमथिन्येनम:

" 𑌬𑌲𑌪𑍍𑌰𑌮𑌥𑌿𑌨𑍍𑌯𑍈 𑌨𑌮𑌃 "

என்று வலது பார்சுவத்திலும்,

सर्वभूत दमन्येनम:

" 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌦𑌮𑌨𑍍𑌯𑍈 𑌨𑌮𑌃 "

என்று இடது பார்சுவத்திலும்,

मनोन्मन्येनम:

" 𑌮𑌨𑍋𑌨𑍍𑌮𑌨𑍍𑌯𑍈 𑌨𑌮𑌃 "

என்று ப்ருஷ்டத்திலும்,

नासत्यायनम:

" 𑌨𑌾𑌸𑌤𑍍𑌯𑌾𑌯 𑌨𑌮𑌃 "

என்று வலதுஜாநுவிலும்,

दस्रायनस:

" 𑌦𑌸𑍍𑌰𑌾𑌯 𑌨𑌮𑌃 "

என்று இடதுஜாநுவிலும் தாரணஞ் செய்துகொண்டு,

नमस्सोमायच

" 𑌨𑌮𑌸𑍍𑌸𑍋𑌮𑌾𑌯𑌚 "

என்பது முதலான இருபத்தொரு மந்திரங்களான் மோக்ஷசாதநப் பிரகரணம் ஒன்பதாவது சுலோகத்தில், திராவிட வியாக்கியாநத்திற் கூறியவண்ணந் தேவதாத்மகமாகச் சரீரத்தினைப் பாவித்தல் வேண்டு மென்பதாம். அது தெரியாத பட்சத்தில் அம்மந்திரத்தைப் பாராயணஞ்செய்து, ஸ்வசரீரத்தைச் சிவசொரூபமாகப் பாவித்து

आपःपुनंतु

" ஆவஃவா நஂதா "

என்ற மந்திரத்தாற் பிராசநஞ்செய்ய வேண்டும்." இவை முதலான அநுஷ்டாநங்களை மோக்ஷசாதநப் பிரகரணத் திராவிட வியாக்கியாநத்திற் கூறியாங்குபதேசித்து ஏகலிங்கார்ச்சநஞ்செய்யும்படி யநேகர்கட் குபதேசஞ் செய்தார். அதைப்பார்த்து இந்த உமாமகேசுவர சாஸ்திரிகள் மிகவுஞ் சந்தோஷப்பட்டு, இச்சிவனாரைச் சிவாம்சாவதாரமென்று நினைத்து உபகாரஞ்செய்ய வேண்டுமென்ற தாகத்தை மிகவும் காட்டினர். மகா நிஸ்பிருகராகிய சிவனாரும், சத்திரவியமாதல்பற்றி அச்சாஸ்திரியாரது உபகாரத்தைப் பெற்றுக்கொண்டு, "நமக்குப் புத்திரசந்ததி யில்லாதிருப்பினும், மலயத்துவச பாண்டிய ராசனைப்போன்று நமது தௌகித்ர சந்ததியானது அபிவிர்த்தியடையும்! அச்சந்ததியில் உற்பவித்தவர்க ளெல்லாரும் சிவோத்கர்ஷவாதிகளாகவும் சிவஞான முடையவர்களாகவு மிருப்பார்கள். இப்போதுற்பத்தியாயிருக்கின்ற இத்தௌகித்திர சிசுவானவன் உபநயநமான தன் மேல் தேத்தைச் வசாங்கமாக அப்பியசித்து வேதார்த்தங்களைக் கிரகித்துப் பூர்ண சிவோபாசகனாகப் போகின்றான்! அதினால் நிரம்ப சந்தோஷமடைவீர்! அந்தியத்திற் கைலாசபதவியடைவீர்!" என்று அநுக்கிரகஞ் செய்தனர்.

இவ்வாறு எமது சிவனார் அநுக்கிரகித்த வண்ணம், மேற்கூறிய உமாமகேசுவர சாஸ்திரிகளும் ஐம்பத்தெட்டு லட்சம் பஞ்சாட்சர ஜபம்செய்து, அந்த மந்திரப் பிரபாவத்தாற் சந்நியாசியாச்சிரமமும் பிரஞ்ஞான கநேந்திரசுவாமிகளென்ற யோக பட்டமும் பெற்று, மீட்டும் அஷ்டாதச லட்சாவிர்த்தி பஞ்சாட்சரம் ஜபித்துக் கடையிற் சித்தியடைந்தனர்! இவர்தாம் மதுரை மீநாட்சியம்மன் சந்நிதிவீதி, சீநிவாசதீதக்ஷிரது மாமனாராவார்.

இத்தீக்ஷிதரது மகனாராகிய சுப்பிரமணியசிவனுரைத்தாம். பூர்ண சிவோபாசகர் ஆவார் என்றதூஉமென்க. இவ்வமிசத்தினர்களெல்லாம் எஞ்சிவனர் கூறிய கூற்றினைத் தமது சிவாநுஷ்டாநங்களினன் மெய்ப்படுத்துதல் காண்க.

இனி ஒரு காலத்தில் விராடபுருஷனுக்கு மூலாதாரஸ்தானமாகக் கருதப்படுவதும்,

"பூதம் யாவையு முள்ளலர் போதென
வேத மூலம் வெளிப்படு மேதினிக்
காதன் மங்கை யிதய கமலமா
மாதொர் பாகனு ராரூர் மயிர்ந்ததால்"

என்று சேக்கிழார் நாயனாரால் சிறப்பித்துச் சொல்லப்படுவதுமாகிய திருவாரூர்ப்பதியின் கண்ணே ரதோற்சவத்தன்று, எமது சிவனர் தம்முடைய சிஷ்யர்களோடும் சிவபக்தர்களோடும் சிவோத்கரிஷப் பிரசங்கம்செய்து கொண்டிருப் புழிக்கண்ணுற்ற தாசில் சுப்பாபிள்ளை யென்பவர், "இவர் யாவரோ? தெரியவில்லை. தேரோ எழும்பாமல் நிலையாய் நின்றதே! என் செய்வோம்! இவர் தேரிழுப்பதற்கு இடையூறாகப்பலர் மனத்தையுங் கவர்ந்து பெரிய கூட்டம் போட்டுக்கொண்டு இவ்விடம் பிரசங்கிக்கின்றனரே!" என்று கோபமுண்டு இரதாரூடரா யெழுந்தருளாநின்ற தியாகராஜப்பெருமானும் தனது பக்த சிரோமணியாகிய சிவனரது சிவோத்கரிஷப் பிரசங்கத்தைச் சிறிது திருச்செவி சாத்துமாறு நின்றருளினரென்பதை யுய்த்துணர்கிலாது எம் சிவனரைப் பாண்டியன் ஆலவாய்ப் பெருமானை யடித்தாங்குப் பிரம்பினலடித்தார்! அடித்தலும் எம் சிவனர் உடனே பிரசங்கத்தை நிறுத்திவிட்டு, ஓடிச்சென்று தேரினையிழுத்தார். இழுத்தவுடனே இதுகாறும் எவ்வளவு இழுத்தும் எழும்பாத தேரும் இடம் பெயர்ந்து நகர்ந்தது! அதுகண்ட யாவரும் மகிழ்மீக் கூர்ந்து எம் சிவனரைக் கொண்டாடினர்கள்!

இவ்வாறு எம் மணிய சிவனரது நாமமும் புகழும் பாரெங்கும் பரந்து சிறந்தன. அக்காலத்து வைஷ்ணவாந்தகாரத்தின் மூழ்கித் தருக்கிக்கிடந்த நாமதாரிகள் தேவாரமோதுபவர்களாகிய பிராமணர்கள் சைவர்கள் ஓதுவர்களாகிய இவர்களை அவமதிப்புடன் விளித்துச் "சைவர்காள்! நீவிர்மிகவு முருகியுருகிப்பாடும்

தேவாரப்பாட்டும் ஒரு பாட்டாமோ? அது சேனை முதலியாரவதார மாகிய எமது சடகோபாழ்வார் கருணைமிக்குச் சொற்ற தமிழ்வேத மாகுதலு முண்டோ? காண்மின்! அஃது அங்ஙனமாதல் திண்ண மென்பதற்குத்தக்க சான்று எம் வியாக்யான கர்த்தர்கள் சுருதியி னின்று மேற்கோள்காட்டி யிருத்தலேயா மென்பதறிவீர்! ஏன சாராம்சமின்றி எம் தேவாரம் சுருதித்தமிழ் என்று குழறிச்செருக் கடைகின்றீர்? போம் போம்! வீணரே!" என்றிகழ்தலைக் காதா ரக்கேட்ட சைவர்கள் மிகவும் மனநைந்து இவர்கள் நாவறுக்கும் அரிவாளைத் தேடித்திரிந்துவர அவ்வரிவாளை யிவரிடத்தே கண் டோமென் ருநந்தக்கூத்தாடி யோடிவந்து சிவனர் பாதபங்கயங் களில் வீழ்ந்து தங்குறையைக் கூறிக் கதறுவாராயினர்!

எங்ஙனமெனில், "அன்பே யுருவா யமைந்து நின்ற எமது சிவனரே! சைவசமயாசாரியர்களாகிய நால்வர் திருவாய் மலர்ந்தரு ளிய தமிழ்ச்சுருதியாகிய தேவார திருவாசகங்களை யிகழ்ந்து தம் திருவாய்மொழியே வேதசம்பந்தமுடையதெனப் பறையறைகின்ற னர். அவர் வாய்ப்பறையழிக்க யாதொரு ஆயுதமும் இன்றள வுங் காண்கிலேம்! தொன்று தொட்டுப் பெரியவர்களும் புலவர் களும் தேவாரம் வேதசம்பந்த முடையதென்று கூறியமொழி பொய்யாகுமோ? அவரது திருவாக்கை நிராகரிக்கு மிப்பாதகர் கள் எங்ஙனமுய்வர்! ஐயனே! இப்புலையருக் கறிவுகொளுத்திப் புத்தி தெளிவிக்கும் ஆற்றலில் லேம்! யாமென் செய்வேம்! எமது குறைகளைத் தீர்ப்பவர் நீவிரே யாதலின் எங்கள் மனோ ரதமீடேறும் வண்ணம் தேவார திருவாசகங்களுக்குச் சுருதிமேற் கோள் எடுத்துக்காட்டி எங்களை அடிமை கோடல் வேண்டு" மெனப் பலவகையாலுந் துதித்துப் பிரார்த்தித்தனர். (அவரது வேண்டுகோட்கிரங்கிய கிருபைவள்ளலாகிய மணிய சிவனரும் அங் ஙனமே யாகுகவென்று திருவாய்மலர்ந்தருளினர்.)

தென்மொழி பயின்றனமென விறுமாப்படைந்து திரியும் வித்துவான்களுக்கு வடமொழிப் புலவராகிய நமது சிவனர் ஓரரி யேறே! இஃது மிறும்பூதோ? சிவனர் தாம் அவர்கட்கு வாக் களித்த வண்ணமே தேவாரப்பதிகங்கட்கு நேரான சுருதி வாக்கி யங்களை யெடுத்துக்காட்டி வைணவக்குறுநரிகளஞ்சி மூலையிலொ ளித் தோடும்படி, தம்மைத் தரிசித்துக்கேட்ட சைவாபிமாநி

கட்குக் கொடுத்து தவினர். கைக்கொண்ட தொண்டரும் இவரது பெருமையை வாயாரப் பாடித்துதித்து ஆநந்தக் கண்ணீர் சொரிந்து சிவனுரிடம் விடைகொண்டு வைணவப்பழங்களை யீருமரிவாளாயினர். இன்றும் அவரெடுத்துக் காட்டிய மேற்கோட் பகுதிகள் இந்நிலவுலகில் வழங்கி நிலைபெறுகின்றன.

அவைமுழுவதையுந் திரட்டிச் சைவோபகாரமாக அச்சிடுதல் வேண்டுமெனக் கருதி யுரிய முயற்சி செய்துகொண்டு வருகின்ருேம். இம் முயற்சி கைகூடுமாறு இறைவன் திருவருள் புரிவாராக.

இது நிற்க. மேற்கூறியாங்குப் பலரும் அம்மதுராபுரியின் கண்ணே யெமது சிவனுரது அநுக்கிரகத்தினுற் கிருதார்த்தர்களாயினுர்கள்! அவர்களிலொருவர் தாம் சோமயாகஞ் செய்ய வேண்டுமென்று சிவனுரைப் பிரார்த்தித்தனர். அப்போது சிவனுர் "சாம்பவர்கள் சோமயாகஞ் செய்யும்பட்சத்தில் ஆக்கிநேய ஸ்நாந பஸ்மருத்திராட்சதரான லிங்கார்ச்சந புரஸ்ஸரமாகவே செய்தல் வேண்டும். அங்குலீசதுஷ்டய உத்சர்ஜநகாலத்தில் அத்வர்யு சகாயத்தினுற் பூசை செய்தல் வேண்டும். அவ்வத்வர்யு சாம்பவனுயு மிருத்தல் வேண்டும்.

सोमेच सत्रदीक्षायां
श्रौतानां लिंगपूजने
यत्रनित्य परित्याग
स्ततत्रलिंगं प्रभूतयेत्

"ஸோமேச ஸத்ரதீக்ஷாயாம்
ஸ்ரௌதாநாம்லிம்கபூஜநே
யத்ர நித்யபரித்யாக
ஸ்தத்ரலிம்கம் ப்ரபூஜயேத்"

என்று கூறியபடி ஆசாரியசரணர், தீக்ஷிதரவர்கள் முதலாயினேரெல்லாம் அத்தகைய ருத்விக்களுந்தகுந்த ராஜாக்களுமிருந்ததனலன்றே யாகஞ்செய்தார்கள்! இக்காலத்து அப்பேர்ப்பட்டவர்களில்லாமையினுற்றுன் யானும் யாகமொன்றுஞ்செய்திலேன்! ஜகதுபகாரமாதல் பற்றிச் செய்தல் வேண்டுமென்று பல சாம்ப

வர்கள் பிரார்த்திக்கும் பட்சத்திற் செய்யவேண்டிய தாவசியக மாம். ஆயினும் சிவார்ச்சநத்தைப்போல அவ்வளவு ஆவசியக மில்லை. ஒருகால் விருத்தியர்த்தத்தினுதல் பரலோ கேச்சையினு தல் செய்யும் பட்சத்தில், கர்ம வைஷ்ணவாத்வைதயோக சாங்கியமதஸ்தர்களை ருத்விக்களாக வைத்துக்கொண்டு செய்யும் படி நேரிடுமாயின் சிவார்ச்சநத்தையாகர்ஷித்து யாகாத்பூர்வ திநத்திற் பிந்நமாகவாதல் சமாந தந்திரமாகவாதல் செய்து பிறகு யாகசங்கற்பஞ் செய்துகொண்டு யாகமத்தியில் ஏகபில் வார்ப் பணமட்டுஞ் செய்து யாகத்தை நடத்தல் வேண்டும். அங்ஙனஞ் செய்யும்போது கண்டருத்திராக்ஷத்தை யெடுக்கக்கூடாது. சிலர் "யாகத்தினல் வேறுஜந்மங் கிடைத்தலினுற் கர்ப்பவாசம் போற லின் அதாவது கர்ப்பத்தின்கட்சிசு அலங்காரமின்றி யிருத்தல் போறலின் ருத்திராக்ஷதாரனங் கூடாது" என்று கூறுகின் ரூர். அங்ஙனங் கூறுதல் நியாயவிருத்தமாம். எப்படியெனில்:— கர்ப்பத்தின்கட் சிசுவிற்கு உபவீததாரணமில்லை! மேலும் உபவீதத்தை யெடுக்கவேண்டு மென்ருவது எடுக்கவேண்டா மென்ருவது விதியுமில்லை. அங்ஙனமிருப்ப, உபவீத விசர்ஜந மின்றி யிருக்கின்றனர். ஆனல் ருத்திராக்ஷதாரணத்திற்கோ மைத்திரேயோப நிஷத்தில் யாகம் செய்யும்போது தாரணம் செய்துகொள்ளும்படி விதியிருத்தல்பற்றி,

यज्ञोपवीत वद्धामार्य

" யஜ்ஞோபவீதவத்தார்யம் "

என்று கண்ட ருத்திராக்ஷத்திற்கு ஆவசியகத்துவஞ் சொல் லப்பட்டிருக்கின்றது. இவ்வண்ணம் விதித்தவற்றின்படி யொ ழுகாது, விதியாதனவற்றின்படி யொழுகுமவர் பதிதரேயாவரல் லரோ?

இது கிடக்க. சிரமாகிற இலிங்கத்தினுக்குக் கோமுகாகிரு தியாகப் பின்புறத்திற் பத்துருத்தி ராட்சமும் முன்புறத்தில் இருபத்திரண்டு ருத்திராக்ஷமும், கௌஷளராப்பியங்கநங்களில் யக் ஞோபவீதத்தைப்போலத் தரித்துக் கோடலாவசியகமாம். சூத் திரம்போடுதல் வேண்டியிருப்பின் இதருருத்ராட்ச கண்டதார ணஞ் செய்துகொண்டு, முன்னுள்ளதை யெடுத்துச் சூத்திரம் போட்டு, மீட்டுந்தாரணஞ் செய்துகொண்டு, மற்றதை நீக்கிவிட்

டுக் கிரியையினைச் செய்தல் வேண்டும். பஸ்மதாரணத்தைக் காட்டிலும் ருத்திராட்சதாரணம் அத்தியாவசியகமாம் யாகத்தில் நவநீதாப்பியங்கநத்திறை் பஸ்மம் திரோகிதமாய் விடுமாதலின், விகுர்தியிஷ்டிகளில் அலங்காரகாலத்திற் பஸ்மதாரணஞ்செய்து கொண்டு இதர மதஸ்தர்களினது சகாயத்தைக்கொண்டு யஞ்ஞம் செய்தல்வேண்டும். அஃதும் ஈசுவரார்ப்பண புரஸ்ஸரமாகச் செய்தல் வேண்டுமென்பதாம்'' என்று உத்தரந்தந்தருளினர். இவ்வாறு உபதேசம் பெற்றவர் மதுரைமீநாட்சியம்மன் சந்நிதி வீதியிலுள்ள ஸ்ரீநிவாஸயஜ்வா. இவர் பல யாகங்கள் செய்து மதுரையம்பதிக்குக் கண்போல் விளங்கி மகோபநிஷத் வித்யாசாதகராகிப் பாசுபத பதவியிலிருந்து முத்தியடைந்தனர்!

அக்காலத்திற் சோமசுந்தரபுரம் சுப்பிரமணிய சாஸ்திரிகளென்று வழக்கமாயழைக்கப்படும் கணபதி பக்தர் என்ற ஒருவர் சிவனரைச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தெழுந்து நின்றனர். அப்போது எமது சிவனர் அவரைப் பார்த்து, 'நும்மைநோக்கும்போது கணபதி ஸ்வரூபமாகக் காணப்படுகின்றதே'' யென்று சொல்ல, அவருமதை யொத்துக்கொண்டு, "அடியோங்கட்கு வம்ச பாரம்பரையாய்ச் சிந்தாமணிக் கணபதி யுபாஸ்தியுண்டு. யானுங் கிருஷ்ண பட்சம் சதுர்த்தியன்று சந்திரோதய காலத்திற் சங்கடஹரண சதுர்த்தி விரதத்தினை யாசரித்து, அருணோதய முதல் இரவு பூஜாகால பரியந்தம் சந்தியாவந்தந ஜபதேவதார்ச்சநங்கள் செய்கிற காலங்கள் தவிர மற்றைக் காலங்களிலெல்லாம் நின்றுகொண்டே யிருப்பது முதலான விரதாநுஷ்டாநங்கள் செய்து வருகின்றேன்! அதன் பலமானது செபகாலத்திற் சமஸ்தானவர்களுங் கணபதி ஸ்வரூபமாகவே யென் கண்ணுக்குத் தோன்றுமாறு செய்யும். அப்பலத்தினுன் இப்போது தங்களது தரிசநமும் லபித்தது. ஆதலின் அடியேன் பிறவிக்கடலைக் கடந்துய்யும் பொருட்டு எற்குச் சிவதத்துவத்தை யுபதேசித்தருளல் வேண்டும்'' என்று பிரார்த்தித்தனர். அப்போது சிவனர் கணபதி பூசைசெய்து சிவபூசை செய்யவேண்டிய தாவசியகமாதலின் இவர் அதிகாரியே யாவர் என்று நினைத்துச் சிவதத்துவத்தை யுபதேசித்தனர். இவரும் பலநாட் சிவபூசைசெய்து சாம்பவ பதவியிலிருந்து மோக்ஷமெய்தினர்!

அங்ஙனங் கணபதி பக்தர்க் குபதேசித்த பின்றை, விளாச்சேரிக் கோவிந்தசாஸ்திரிகள் என்று வழக்கமாய் அழைக்கப்படும் தேவீபக்தர் என்ற ஒருவர். எமது குருசிரேஷ்டராகிய ஸ்ரீ மணிய சிவனாரிடம் போந்து,

श्रीनामादि गुरुत्रयं

" ஸ்ரீநாமாதிகுருத்ரயம் "

என்ற சுலோகத்தினையாரம்பித்து,

वंदे गुरोर्मण्डलम्

" வந்தேகுரோர்மண்டலம் "

என்று கூறி முடித்துச் சிவனாரை நமஸ்கரித்தெழுந்து நிற்பாராயினர். அப்போது சிவனார் அவரைக் கண்ணுற்றுச் "சாக்தசார்வபௌமராகக் காணப்படுகின்றதே" யென்று கூறிக் கொண்டே,

सिद्धांतां दक्षिणं वामंकौकळम

" ஸித்தாந்தம்தக்ஷிணம்வாமம்கௌளகம் "

என்ற பேதங்களிலே அவ்வவற்றிற்குச் சொல்லியிருக்கின்ற மந்திரங்கள், தீக்ஷாப்பிரகாரங்கள். முத்திரா லக்ஷணங்கள், சந்தியை, ரகஸ்யார்ச்சநம் முதலியவற்றைக் குறித்துப் பிரசிநம் பண்ணினார், அங்ஙனஞ் சிவனார் வினய வினைக்கள் அனைத்தினுக்கும் சிவனார் சந்தோஷிக்குமாறு தக்க விடைகள் கொடுத்து நின்றார்! அவற்றையெல்லாஞ் செவியுற்று எங்குல முழுதாள வந்த சிவனார் மகாவாக்கியப் பிரகரணம் பதினன்கு பதினைந்தாவது சுலோகங்களில்,

तुर्यशिवाविरिंद्र गुरु वत्तत्वाद्धि
तायांस्मृते के
सुक्रस्मूर्तिरिव
अनुभूतेःपरम्

" துர்யசிவாவிரிஞ்சகுருவத்தத்வாத்தி
தாயாம்ஸ்ம்ருதே தகே "
" ஸுக்ருஸ்மூர்த்திரிவ ............................
............................அநுபூதே:பரம் "

என்று கூறியபடி, சாக்தசாஸ்திரங்களிற் கரைகண்டபேர்கள் தாம் அங்கியர்ச்சநங்களாகிய சாம்பவபாசுபத மகா சைவபூசைகட்கு அருகர்கள் என்று எண்ணி யிவரைச் சாம்பவபூசைக்கு யோக்கியரென்று சிவதத்துவத்தை உபதேசித்து ஏகலிங்க சிவார்ச்சனை செய்யுமாறு உத்தரவும் கொடுத்து எங்குலமுழு தாண்டருளினர்!

இங்ஙனம் சிவனூர் தம்மை வணங்கிய பலருள்ளும் அங்கி பூசைக்கு அதிகாரிகளாவாரைத் தெரிந்து கொண்டு உபதேசித்த பின்றை, ஆலாசியக்ஷேத்திரத்திலுள்ள இஷ்டப்பிரதாயகருடைய ஆலயத்தின் கண் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி சந்நிதானத்தில் ஏகாந்தமாகத் தமது சிஷ்யர்கட்குச் சிவபூசாமந்திரங்களை யுபதேசிக்கின்ற காலத்திலிற், அக்கோபரிசாரகராகிய கிருஷ்ண சிவமென்ற ஒருவர் சார்வ காலமும் சிரஸ்கண்ட தேசங்களில் ருத்திராட்சதாரணஞ் செய்பவர், எமது சிவனூரிடம் போந்து "அடியேற்குஞ் சிவதத்துவத்தை யுபதேசித்தல் வேண்டும்" என்று பிரார்த்தித்தனர். அப்போது எமது சிவனூர் "நமக்கு இப்போது உபதேசிக்கக் கூடாது. ஏனென்றால்:—நீவிர் சிவ கைங்கிரியஞ் செய்வதனாலும், அஃதே உமது காலக்ஷேபமாயிருப் பதனாலும், இப்போது உபதேசம் செய்தால் சிவகைங்கரியத்திற் குப் பாதகம் நேரிடும்! அதனால் நமது காலக்ஷேபத்திற்கும் பாதக முண்டாகும்! ஆனாற் கொஞ்சக் காலத்திற்குப் பிறகு இந்தக் கணபதி பக்தரால் உமக்கு உபதேசமாகும்" என்று உரைத் தருளினர். அவரும் சிலகாலம் சாமாநியமாகச் சிவகைங்கரியத் தினுக்கு விரோதமின்றி யேகலிங்கார்ச்சநஞ் செய்துகொண்டு வந்தார். அவர் சிவராத்திரியாதி புண்ணிய காலங்களில் சகஸ் ரருத்திராக்ஷதாரணம் செய்துகொண்டு, அலங்காரத் திருமஞ்சநச் சருவத்தைச் சிரத்திலேந்திக் கொண்டு வாத்திய கோஷத்துடன் வீதிகளில் வருவதைப் பார்த்து, ஜநங்களெல்லாம் சாக்ஷாத் பரமசிவனென்று துதிப்பார்கள்! இவ்வண்ணஞ் சின்னாட்கழிந்த பின்றை அவர்க்குக் கணபதி பக்தராற் சாங்கமாக உபதேசஞ் செய்யப்பட்டது. அப்பூசையால் அவரும் முக்தியடைந்தனர்!

இவ்வாறு எமது சிவனூரால் மதுரையில் வெகு பேர்கள் பவ சாகரத்தைக் கடப்பதற்கேற்ற அற்புதசாவாய்கள் பெற்றுய்ந் தார்கள்!

இத்தகைய சிவகாருண்ணிய மூர்த்தியாராகிய ஸ்ரீ மணிய சிவனுர் நாற்பது வருஷகாலம் பற்பல க்ஷேத்திரங்களிலும் உற்சவ தரிசநஞ்செய்தனர்! மதுரையில் ஆவணி மூலோற்சவமும், சிதம்பரத்தில் ஆருத்திராதரிசநமும் ஆனித் திருமஞ்சநமும் தரிசித்து, ஏனைய க்ஷேத்திரங்களில் எவ்வெக்காலங்களில் உற்சவங்களோ அவ்வக்காலங்களில் ஆங்காங்குச் சென்று தரிசநஞ்செய்து அவ்வவ்விடங்களில் உள்ள சிவபக்தர்கட்கெல்லாம் விசேஷஞாநத்தை உபதேசித்து, இதரமதவாதிகளைக் கண்டித்துச் சிவோத்கர்ஷத்தைப் பிரகாசப்படுத்திப் பிலவங்கசம்வற்சரம் மாசிமீ கிருஷ்ணபட்சம் சப்தமியாகிய சோமவாரதிநத்தில் இராத்திரிச் சோமவார பூசை சமாப்தியானதன்மேல், தாம் திருவவதாரஞ் செய்த இடமாகிய மாங்குடியிலுள்ள ஆலயத்துச் சுவாமி தரிசநத்திற்குச் சென்று கைலாசத்திற்கு வருமாறு பரமசிவனிட்ட ஆக்ஞாரூபமாயுள்ள அசுவாரோகணத்தைப் பெற்றுக்கொண்டு தமது கிருகத்திற்குப் போந்தனர்! சாமாநியசந திருஷ்டிக்குச் சிவனுர் தாம் வாந்திசெய்தனர்போற் றோன்றினர்! இங்ஙனமிவர் வாந்தியெடுத்தது இச்சகத்தின் கண், தாரபுத்திராதி யநுபவங்களை யெல்லாந் தியாகஞ் செய்ய வேண்டுமென்று சநங்கட்கு உபதேசிக்குங் கருத்தினை யுட்கொண்டு இவையெல்லாந் துச்சம் என்று இகழ்ந்து துப்பிக்காட்டியது போலும்! அவர்கட்குச் சம்பந்திதேக தர்மங்களாகிய வாதபித்தாதி யுபத்திரவங்கள் ஒருகாலும் நேரிடவேயில்லை. நிருசிம்ம சந்நியாசியாரது ஆசிசாரந் தம்மாட்டணுகாதிருக்குமாறு திரிராத்திரோபவாசமும், அதன் றொடர்ச்சியாய்ப் பன்னிரண்டு சம்வற்சரம் நக்தவிரதமும், அதன் பிறகு யாவத் ஜீவம் சோமவாரம் மகாப்பிரதோஷ விரதங்களுந் திரிகால சிவார்ச்சநமுஞ்செய்து அந்திய சோமவாரத்தில் எஞ்சிவனுர் ஏதோ சிறிது சிரமத்தினுல் வாந்தி செய்தனர் போன்று அபிநயஞ் செய்து, 'சிதம்பரம்' என்ற சப்தத்தினை உச்சரித்தனர்! அச்சப்தத்தினைக் கேட்டு அவரது ஜேஷ்ட குமாரர் தம்மை யழைத்தாரென்று நினைத்துக்கொண்டு சமீபத்திற் போந்து தீர்த்தங் கொணர்ந்து கொடுத்தனர். அதை யெமது அருமைச்சிவனுர் வாங்கிப்பாதப்பிரக்ஷாளந ஆசமந பஸ்மதாரணங்கள் செய்துகொண்டு, வாயிற்றெற்றியிற் சாய்ந்து தமது சீர்பாதங்களை யநுக்கிரகார்த்தமாக நீட்டிவிட்டனர்! அப்போது சிவனுரது மைத்துனரு மாணைக்

கருமாகிய இராஜாங்கம் அண்ணவையர் விரைந்து வந்து சவ்வாரிப்பல்லக்கிற் சிவனரை யெழுந்தருளச்செய்து பஞ்சநத க்ஷேத்திரத்திற்குக் கொண்டுவந்து விட்டனர்! சூரியோதயமான பின்றைச் சுவாசம் சொற்பமாயிருந்தது. அப்போது ஜ்யேஷ்ட குமாரராகிய சிதம்பர சிவனர் தமது பிதாவாகிய எமது மணிய சிவனரது ஆன்மார்த்தலிங்கத்தினை யெடுத்துத் தமது தந்தையாரது இருதயத்தில் வைத்துக் கையினிற் பில்வதளத்தைக் கொடுத்து இலிங்கத்திற் சமர்ப்பிக்குமாறு செய்வித்தனர். ஏனென்றால்:—

प्राण प्रायाण कालेतु
स्वस्य शक्तिर्नचेत्तथा ।
कारणार्थं प्रयत्नेन
पुत्राद्यैश्शिवपूजनम् ॥

"ப்ராணப்ரயாணகாலேது
ஸ்வஸ்யஶக்திர்நசேத்ததா ।
காரணார்த்தம்ப்ரயத்நேந
புத்ராத்யைஶ்ஶிவபூஜநம் ॥"

என்று சொல்லியபடி அந்தியகாலத்திற் சிவபூசை யின்றிச் சூரியோதயமான பிற்பாடு, மரணஞ் சம்பவிக்குமேல், ஆஸ்யதண்டுலம் இடுதலொண்ணாது" என்று ஸ்ரீ மணிய சிவனர் சொல்லக் கேட்டிருந்தனராதலின், இவ்வண்ணஞ் சம்பிரதாயஞ்செய்து ஔர்த்துவ தேகிக கிருத்தியங்களைப் பிரமமேதைவிதிப்பிரகாரம் யதோக்தமாகச் சிதம்பரசிவனர் நடத்தினர்.

கிருகயக்ஞமான பிற்பாடு, சிதம்பரசிவனர் தமது தந்தையாரது ஆக்ஞாப்பிரகாரம் ஸ்ரீவித்தியாவிருத்திக் கிரந்தத்தினையெடுத்து மதுரையம்பதிக்குக் கொண்டுபோந்து சிவனரது சிஷ்யர்களாகிய சாம்பவர்கட்குக் கொடுத்தனர். அக்கிரந்தத்தினைச் சிவனரது சிஷ்ய சாம்பவர்களும் நமஸ்காரம் பண்ணிச் சிரத்தில் வைத்துக்கொண்டு பூசித்தார்கள். அதையொவ்வொருவரும் தமக்கெனத் தனித்தனிப் பிரதி செய்துகொண்டு, அவரவர் தத்தம் கிருகத்தில் வைத்து மாசிமீ கிருஷ்ணபட்சம் சப்தமிதினத்திற், குருகீதையிற் சொல்லப்படுகின்ற குருபூஜா கல்பப்பிரகாரம் அத்யாபி பூசித்து வருகின்றனர்! பஸ்மருத்திராட்சதாரிகளாய் விளங்

குகின்ற சிவபக்தர்கட்கு அத்திநத்தில் அந்நதாநஞ்செய்கிறது நிரம்ப விசேஷமாதலையுணர்ந்து அஃதும் சிவனாரது சிஷ்யசாம்ப வர்கள் செய்து வருகின்றார்கள்.

அத்திநத்தில் அந்நதானஞ் செய்கிறது விசேஷப் பலன் றருதல் யாங்ஙனமெனில் :—சைவபாஷியஞ்செய்த ஸ்ரீகண்டசிவா சாரியாரது திநமும், ஸ்ரீ அப்பைய தீக்ஷிதரவர்களுடைய திநமும், அவ்வாறே வெகு பரிவிர்த்தியின்மேல் எமது மணிய சிவனாரது திநமும் அந்தப்பிலவங்க வருஷம் மாசிமீ கிருஷ்ணபட்சம் சப்தமி யாதலின், பட்சியபோச்சியத்துடன் தத்தியோந்ந நைவேதநஞ் செய்து சந்தர்ப்பணை செய்தல் வேண்டும்! புஷ்யசுக்கில பஞ்சமி யில் ஹரதத்த சிவாசாரியாருடைய திநம். அன்றைத்தினத்திற் கொழுக்கட்டை பண்ணி நைவேதநஞ் செய்தல் வேண்டும் ஏனென் றால் ஆசாரிய சரணராகிய ஸ்ரீஹரதத்த சிவாசாரியார் சரீரத் தோடு ஊர்முழுது மழைத்துக்கொண்டு கைலாச யாத்திரை போகிற காலத்திலொரு கிழவியார் திநந்தோறும் மகாகணபதிக் குக் கொழுக்கட்டை நைவேதநஞ் செய்த பிறகு போசநஞ் செய் வது வழக்கமாதலின் அவ்வண்ணமே யன்றைக்கும் மகாகண பதிக்குக் கொழுக்கட்டை பண்ணி நைவேதநஞ்செய்த பிறகு தான் வருவேனென்று சொல்லியவர்களை யனுப்பிவிட்டார்! பிறகு ஆசாரிய சரணரும் அக்கிரகாரத்துச் சநங்களை ஆண்டுப்போந்த தெய்வ ரதத்தில் ஏற்றிக்கொண்டு வெகுதூரங் கைலாசத்தை நோக்கிச் சென்று விட்டனர்! அப்போது கிழவியார் கொழுக் கட்டை நைவேதநஞ் செய்து மகாகணபதியைப் பிரார்த்தித்தார்! உடனே மகாகணபதியும் அக்கிழவியாருக்கு ஆகாசத்திற் கமநஞ் செய்யுமாறு சத்தியீந்தருளினர்! அக்கிழவியாரும் அச்சத்திப் பிர பாவத்தினலெல்லோருக்கு முன்னரே கைலைவந்து சேர்ந்ததை யாசாரிய சரணர் கண்ணுற்று,

अश्वेनयजीनं जर तया योजनम्

"அஸ்வேநயோஜநஂஜர தயாயோஜநம்"

என்று கூறியருளினர். அன்று தொட்டன்றே "கிழவியுங் காதங் குதிரையுங்காதம்" என்ற பழமொழியும் தமிழ்ப் பாஷைக்கண் உடையதா உமென்க. அக்கிழவியார்க்குக் கொழுக்கட்டை நை

வேதநத்தாற் கைலாசங் கிடைத்ததாதலின் அன்று திநங்கொழுக் கட்டை நைவேதநஞ் செய்தல் வேண்டுவது எவ்வளவு ஆவசியக மோ அவ்வளவு ஆவசியகம் இச்சிவனுரது சப்தமிதினத்தில், தத்தியோந்ந நைவேதநத்திற்கும் உளது. இத்தத்தியோந்நத் தைத் தான் மகாராஷ்டிர பாஷையிற் 'பகாளபாத்' என்று சொல்லுவார்கள். அது மகா சாஸ்திருதமான தத்தியோந்நமாம். மேலு மது ஸ்ரீ தக்ஷிணமூர்த்திக்கு மிகப்பிரீதியுடன் நைவே தநஞ் செயற்பாலது. இது சிவஞானத்தைக் கொடுக்கத்தக்கது. ஆதலின் இந்தப் பிரகாரஞ்செய்து ஸ்ரீ வித்தியாவிருத்தி முழு தும் சிவபூசா காலத்திற் பாராயணஞ் செய்தல் வேண்டும். அசக்த விஷயத்திற் சிரவணமாவது ஆவசியமாய்ச் செய்தல் வேண்டும். இவ்வண்ணம் வருஷந்தோறும் பூசை பாராயணம் பிராமண சந் தர்ப்பணை முதலியனவற்றைச் செய்கிறவர்களுக்குச் சமஸ்தபாக் கியமும் சிவஞான சித்தியும் லபித்து அந்தியத்திற் பரமசிவசாயுச்சி யமுங் கிடைக்கின்றது. இந்தப்பிரகாரம், ஹே, சிதாநந்த சத்சி ஷ்ய! நீயும் பூசை செய்து பாராயணஞ் செய்யவேண்டும். இந்த சரித்திரம் வாசமா கோசரமாயிருப்பதனுலே யேக தேசங்கூறி னேன்" என்று சொல்லிச் சிதாநந்தவல்லீஸ்வருபராகிய மாகா குருவானவர் தமது சிதாநந்த சிஷ்யருக்குச் சிவனுரது சீவிய சரித்திரோபதேசஞ் செய்தனர்.

இச்சரித்திரத்தைப் படிப்பவர்கட்கும் படித்துக் கேட்பவர் கட்கும், சமஸ்தபாக்கியமும், நித்தியா நித்திய வஸ்துவிவேகமும் சிவஞானநசித்தியும் கிடைக்கின்றன. அஃது :—அத்தவபாரப் பிரமலோகம், பிரமகோச லோகம், பூர்ணசிவலோகம் இந்த மூன் றும் நித்தியமாம். சுத்தமாயாதத்துவத்திற்குக் கீழ்பட்டவராகிய கலாதத்துவம் முதற் பிருதிவீதத்துவங்காறுமுள்ள அண்டங்களும் அவற்றில்லொவ்வொரு அண்டத்திற்கும் பன்னுன்குலோகங்களுங் கூடிய அல்பமாயா தத்துவமாயுள்ள பிரதமபாதமானது அநித் தியம். இத்தகைய விவேகத்துடன் கூடியவர்களாகி இருதயத் திலும் ஆன்மார்த்தலிங்கத்திலும் பூசைசெய்து, இப்பலத்தினுல் அத்வபாரப் பிரமலோகத்தினை யடைந்து, அவ்விடத்திற் பூரண சிவோபாஸ்தி செய்து, பரமசிவலோகத்தின் வழியாய்ப் பூரண சிவலோகத்தை யடைந்து, அவ்விடத்திற் சாலோக்கியசாமீப்ய சாரு

ப்ய சாஷ்டித்வமென்று சுகபோகாந்தத்தில் நிர்க்குண சிவலிங்கத்தோடு சாயுஜ்யத்தை யடைவார்கள் என்றபடியாம்.

ஓம்

ஸ்ரீ சுப்பிரமணிய சிவாயநம:

பார்த்திவருஞ் சாம்பவரும் பாசுபதப் புண்ணியஞ்
சீர்த்தமகா சைவரெனுஞ் செல்வர்களுங்—கூர்த்தபதிப்
பத்தர்களுஞ் சித்தர்களும் பன்னரிய யோகியரு
மெத்தகையோ ரும்வாழியே.

ஸ்ரீ மந் மணிய சிவனரது

சீவியசரித்திரம்

பூரணம்

திருச்சிற்றம்பலம்

---

# கலாவதி

## செய்யுண் முதற் குறிப்பகராதி.

உடுக்குறியுற்றன மேற்கோட்பாக்களாம்.
எண் பக்கத்தைக் குறிக்கும்.

## கலாவதி

### மேற்கோள்களெடுக்கப் பட்ட நூல்கள்.

எண் பாட்டைக் குறிக்கும்.

கலாவதி

# சங்கீதப் பாட்டுக்களின் முதற் குறிப்பகராதி



—(0)—

# கலாவதி—பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 3. | 4. | தென்முகவைப | தென்முகவைப் |
| 7. | 2. | மனதைச்சிறிதுச் | மனதைச்சிறிது |
| 7. | 38. | கொண்ட | கொண்டன |
| 8. | 34. | வோராராண்மகவை | வோராரண்மகவை |
| 15. | 32. | செய்ததற்க்கு | செய்ததற்கு |
| 17. | 11. | லீலாவதி சுலோ சனை | லீலாவதி சுலோசனை |
| 22. | 18. | சூததிரதாரன் | சூத்திரதாரன் |
| 24. | 23. | பரீக்ஷைக்கும் | பரீக்ஷிக்கும் |
| 33. | 29. | என்வள | எவ்வள |
| 36. | 33. | வாங்கியசேகரபாண்டியன் | வங்கியசேகரபாண்டியன் |
| 37. | 17. | நாடுகளுக்குக் | நாடுகளுக்குச் |
| 40. | 27. | அரண்மணைக்கு | அரண்மனைக்கு |
| 40. | 31. | மநோமோர்கிநி | மநோமோகிநி |
| 41. | 19. | பெசுதல் | பேசுதல் |
| 41. | 25. | விகடவசுநன் | விகடவசநன் |
| 42. | 23. | கற்றுக | கற்றுக் |
| 43. | 7. | மகாரராஜா | மகாரர்ஜா |
| 43. | 31. | பார்க்கப | பார்க்கப் |
| 66. | 3. | செல்லுகிறீர்கள் | சொல்லுகிறீர்கள் |
| 69. | 9. | உன்னிடத்திலெயே | உன்னிடத்திலேயே |
| 69. | 10. | மநோமொகிநி | மநோமோகிநி |
| 69. | 18. | இத்த | இந்த |
| 96. | 35. | குடிக்கொண்டிருந்தா | குடிக்கொண்டிருந்தா |
| 113. | 12. | சுசகரீரன் | சுகசரீரன் |
| 125. | 4. | மநேமோகிநி | மநோமோகிநி |
| 125. | 15. | யான் விரும்பிய | யான் விரும்பிய |
| 126. | 3. | சத்தியப்பிநியன் | சத்தியப்பிரியன் |
| 126. | 8. | சந்நிதிக்தட் | சந்நிதிக்கட் |
| 126. | 10. | யணுருகின்றனர் | யணுகுகின்றனர் |

# கலாவதி—பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 126. | 28. | நும்மிருவக்கு | நும்மிருவருக்கு |
| 127. | 32. | வளப்பின் | வனப்பின் |
| 128. | 17. | நடுக்குகின்றதே | நடுங்குகின்றதே |
| 129. | 4, | ஒ | ஓ |
| 134. | 20. | பர்த்திரங்கள் | பாத்திரங்கள் |
| 134. | 31. | வாச்ந்திகை | வாசந்திகை |
| 135. | 33. | அரபிரமர் | அரிபிரமர் |
| 136. | 36. | யெக்கரலத்த்துஞ் | யெக்காலத்துஞ் |
| 136. | 38. | நெடிலடியாசிய | நெடிலடியாசிரிய |
| 146. | 19. | யாவலேரடென் | யாவலோடென் |
| 148. | 7. | யிருககு | யிருக்கு |
| 149. | 17. | பாற் | பார்க் |
| 151. | 25, | அளி | எளி |
| 160. | 26. | தலைவாரகு | தலைவராகு |

குறிப்பு:—143-ம் பக்கத்தின் குறிப்புரையை 145-ம் பக்கத்தில் கண்டு கொள்க.

# பாவலர் விருந்து

## செய்யுண் முதற்குறிப் பகராதி

### 1. மணியசிவனார் கலிவெண்பா



### 2. அவயவ வறிக்கை



### 3. கையறுநிலை



### 4. கடற்கரையுலா



### 5. தாமரைத்தடம்

## 6. கலங்கரை விளக்கம்



## 7. ஆசானுருநிலை



## 8. பட்டினக் காட்சி



## 9. மதுரைமாநகர்

## 10. போலியாராய்ச்சியன்



## 11. ஓர் ஐயப்பாடு



## 12. பரிந்துரை



## 13. முடிசூட்டிரட்டைமணிமாலை



## 14. புண்டிதநாட்டம்

# செய்யுண் முதற்குறிப் பகராதி



* உடுக்குறியுற்றன ஆசிரியரியற்றியவை